# வேதாந்த ஸாரம்

## वेदान्त-सार:





தமிழாக்கம்
சுந்தரேச ஆத்ரேயன்






ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-4

# வேதாந்த ஸாரம்

(ஸதானந்த யோகீந்திரர் அருளியது)

## ॥ वेदान्त-सारः ॥

(सदानन्द योगीन्द्र-विरचितः)

தமிழாக்கம் :
சுந்தரேச ஆத்ரேயன்





ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-4

# பொருளடக்கம்

பக்கம்

## முகவுரை

அத்வைத சாஸ்திரத்தின் அடிப்படையான கொள் கைகளை எடுத்துக் கூறுகின்ற மிகச் சிறந்த ப்ரகரண* நூல்களுக்குள்ளே வேதாந்தஸாரமும் ஒன்ருகக் கருதப் படுகிறது. இதை எழுதியவர் பரமஹம்ஸ பரிவ் ராஜக ஸ்ரீ ஸதாநந்த ஸரஸ்வதீ அவர்கள். இவர் ஸ்ரீ அத்வயாநந்த ஸரஸ்வதீயின் சீடராவார். கி. பி. பதி ஞரும் நூற்ருண்டில் வாழ்ந்தவர் என்று சிலரும், கி. பி. பதினைந்தாம் நூற்ருண்டின் நடுவில் வாழ்ந்தவர் என்று மற்றும் சிலரும் சொல்லுகிருர்கள். ஸ்ரீ ராமசந்த் ரானந்த ஸரஸ்வதீ அருளிய ப்ரஹ்ம போதினீயும், ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஸரஸ்வதீ அருளிய ஸுபோதினீயும், ஸ்ரீ ஆபதேவர் எழுதிய பாலபோதினீயும், ஸ்ரீ ராமதீர்த்தர் எழுதிய வித்வன்-மனோரஞ்ஜனீயும், வேதாந்த ஸாரத் திற்கு ஏற்பட்ட சிறந்த உரைகளாகும். பாலண்டைன், ஜேகப் போன்ற மேல் நாட்டினர் சிலரும் வேதாந்த ஸாரத்தை மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிருர்கள். வேறு மொழிகளிலும் இதற்கு மொழி பெயர்ப்புக்கள் உள்ளன. பேராசிரியர் எம். ஹிரியண்ணவும், ஸ்வாமி நிகிலாநந்தரும் இந்நூலை மொழி பெயர்த்து, முன்னுரை, குறிப்புகளுடன் வெளியிட்டிருக்கிருர்கள்.

---

* शास्त्रैकदेशसंबद्धं शास्त्रकार्यान्तरे स्थितम् ।
आहुः प्रकरणं नाम ग्रन्थभेदं विपश्चितः ॥

குறிப்பிட்ட சாஸ்திரத்தின் ஒரு சில கொள்கைகளை எடுத்துச் சொல்லுவதாகவும், அந்த சாஸ்திரத்தைத் தவிர வேறு ப்ரயோஜனத்தை உடையதாகவும் இருக்கிற நூலுக்கு ப்ரகரணம் என்று பெயர், என நூல்களினுடைய வேற்றுமை தெரிந்தவர்கள் சொல்லுகிருர்கள்.

## நூலின் சுருக்கம்

இந்த மொழி பெயர்ப்பில், இந்நூல் ஆறு அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதல் அத்தியாயத்தில், வேதாந்தத்தைப் பயிலுமுன் ஒரு மாணவன் பெற்றிருக்க வேண்டிய தகுதியையும், ஆசாரியனை அணுகி வித்யையைப் பெறவேண்டிய அவசியத்தையும் வற்புறுத்திய பிறகு, இரண்டாம் அத்தியாயத்தில், அத்யாஸம் என்று சொல்லப்படுகிற அத்யாரோபம்* என்றால் என்ன என்பதை ஸ்ரீ ஸதாநந்தர் விளக்குகிறார்.

பரம்பொருளே உண்மையான வஸ்து. மற்றவையெல்லாம் அவஸ்துக்கள், தோற்றங்கள். இருட்டில் கயிற்றைப் பாம்பாக நினைத்துவிடுவது போல, அவஸ்துக்களை, தோற்றங்களை, உண்மையென்று கொள்வதும், அவற்றின் குணங்களை மெய்ப்பொருளுக்குரிய குணங்களாக நினைத்து மயங்குவதும், அத்யாரோபம் எனப்படும். இது அஞ்ஞானத்தின் விளைவாக நிகழ்வது. மெய்ப்பொருள், ஸத், சித், ஆனந்தமே வடிவமாக இருக்க, நிலையில்லாததும், ஜடமும், துக்கமயமாகவும் இருக்கிற உடலையும் உலகத்தையும் மெய்யென்று நம்பியிருப்பதும் இந்த அஞ்ஞானத்தின் காரியமான அத்யாரோபம்தான்.

அஞ்ஞானம், ஸமஷ்டி (தொகுதி)யாகவும், வ்யஷ்டி (தனித்தனி)யாகவும் பகுத்துக் கூறப்படுகிறது. ஸமஷ்டி வடிவில் இது மாயை என்றும், வ்யஷ்டி வடிவில் இது

---

* அத்யாரோபம் என்ற தவறை முதலில் விளக்கி உணர்த்தி, பிறகு அந்தத் தவறை நீக்கி அபவாதம் செய்து நிஷ்ப்ரபஞ்சமான ஆத்மாவைப்பற்றி உபதேசம் செய்வது ஆசாரியர்களின் முறை என்று சொல்லப்படுகிறது.

अध्यारोपापवादाभ्यां निष्प्रपञ्चं प्रपञ्च्यते ।
शिष्याणां बोधसिद्ध्यर्थं तत्त्वज्ञैः कल्पितः क्रमः ॥

அவித்யை என்றும் சொல்லப்படுகிறது. இது இரண்டு ஆற்றல்கள் உடையது: (1) மறைக்கும் சக்தி (ஆவரணம்) (2) தோற்றுவிக்கும் சக்தி (விக்ஷேபம்). உண்மையை மறைத்து, பொய்யைத் தோற்றுவிக்கிறது. இயற்கையில் ஸத், சித், ஆனந்தமான ஆத்மாவை, பிறப்பு, இறப்பு முதலியனவற்ருல் துன்புறும் ஸம்ஸாரியான ஜீவனுகத் தோற்றுவிக்கிறது. பௌதிகப் பிரபஞ்சம், ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள் என்ற இந்தப் பொய்த் தோற்றங்களெல்லாம் அஞ்ஞானத்தின் விளைவாக உண்மையை மறைத்துக்கொண்டு எழுகின்றன.

மூன்ருவது அத்தியாயத்தில், ஆத்மா அல்லாதவற்றை ஆத்மாவாகக் கருதும் சில விபரீதக் கொள்கைகள் கண்டிக்கப்படுகின்றன. உடல், புலன்கள், ப்ராண சக்தி, மனது இவற்றையே ஆத்மா என்று சொல்லி, சார்வாக மதத்தினர் தங்கள் கருத்திற்கேற்ப வேதாந்த வாக்கியங்களைத் திரித்துக் கூறுகின்றனர். இது தவருகும். யுக்திகளைத் தவிர, சுருதிகளும் அவர்களுக்கு விரோதமாக இருக்கின்றன.

"ஸ்தூலமில்லை; நுட்பமுமில்லை. குட்டையுமில்லை, உயரமுமில்லை" என்ற ப்ருஹதாரண்யக சுருதி இருப்பதனுல் உடல் ஆத்மாவாக இருக்க முடியாது. "அதற்கு (ஆத்மாவிற்குக்) கண்களில்லை, காதுகளில்லை; கைகளில்லை, கால்களில்லை" என்று முண்டக உபநிஷத் சொல்லுவதனுல், புலன்கள் ஆத்மாவாக இருக்க முடியாது. "ப்ராணனைவிட வேருனது; மனத்தைவிட வேருனது, தூயது" என்று முண்டக உபநிஷத் சொல்லுவதனுல் ப்ராண சக்தியும், மனதும் ஆத்மாவாக இருக்க முடியாது. ச்வேதாச்வதர உபநிஷத்தில்

"இந்த ஆத்மா எல்லையில்லாதது ; விச்வ உருவமானது ; கர்த்தாவன்று" என்று சொல்லப்பட்டிருப்பதால், யோகாசார பௌத்தர் கூறுவதுபோல் விஞ்ஞானமான அறிவும் ஆத்மாவாக முடியாது. "தொடக்கத்தில் இது ஸத்தாகவே இருந்தது" என்ற சாந்தோக்ய சுருதி இருப்பதனாலே, சூன்யமே ஆத்மா என்ற மாத்யமிக பௌத்தர் கூறும் வாதமும் வேதத்திற்கு முரணானது.

நான்காவது அத்தியாயத்தில், அபவாதம் என்பது என்ன என்று விளக்கப்படுகிறது. இருட்டில் பாம்பு என்று நினைத்தது உண்மையில் பாம்பு அல்ல, கயிறு தான் என்று தெரிந்து கொள்ளுவதுபோல், இந்த உலக மெல்லாம் பரம்பொருளில் ஒரு தோற்றமேயன்றி, உண்மையில் அங்கு இல்லை என்று உணர்ந்து கொள்வது அபவாதம் எனப்படும். உபநிஷத்துக்களில் உள்ள மஹாவாக்யங்களின் மூலமாகத்தான் ஆத்மாநு பவம் ஏற்படும்.

'தத்வமஸி' (நீ அதுவாக இருக்கிறாய்) என்ற மஹா வாக்யத்தின் பொருளை பாக-த்யாக-லக்ஷணையைக் கொண்டு புரிந்து கொள்ளவேண்டும். இங்கே 'தத்' என்பது ஈசுவரனைக் குறிக்கும் சொல். 'அது' என்று வேறாக இருக்கும் எதையோ ஒன்றைச் சுட்டிக் காட்டுவது போல், பரோக்ஷமாக இந்தச் சொல் உபயோகப்படுத்தப் படுகிறது. ஆகவே இங்கு பரோக்ஷத்வம் இருக்கிறது. மேலும் ஈசுவரன் எல்லாமறிந்தவர். 'த்வம்' என்பது ஜீவனைக் குறிக்கும் சொல். 'நீ' என்று நேரடியாக அபரோக்ஷமாக ஜீவன் இங்கு குறிக்கப்படுகின்றான். மேலும் ஜீவன் சிற்றறிவு படைத்தவன். பிறப்பு, இறப்பு என்ற சுழலில் அகப்பட்டவன். இப்படிப்பட்ட ஜீவனும் ஈசுவரனும் எப்படி ஒன்றாக முடியும்? முடியாது.

ஆகவே, ஈசுவரன், ஜீவன் இவர்களிலுள்ள முரணுன அம்சங்களை நீக்கிவிட்டு, அவர்களின் பிரதானமான சுத்த சைதன்யாம்சத்தை மட்டுமே தத்வமஸி என்ற மஹாவாக்யம் குறிக்கிறது என்று எடுத்துக்கொள்ள வேண்டும். முரணுன பாகங்களைத் தியாகம் செய்து விட்டு, உட்கருத்தான சுத்த சைதன்யத்தை மட்டும் பெறுகின்ற இது பாக-த்யாக-லக்ஷணை என்றும், ஜஹதஜஹல்லக்ஷணை என்றும் சொல்லப்படுகின்றது.

வாக்கியங்களின் நேரடியான பொருளுக்கு முக்யார்த்தம் என்று பெயர். நேரடியான பொருள் பொருந்தாத போது, அதன் லக்ஷ்யார்த்தம் அல்லது உட்கருத்து என்ன என்று பார்க்கவேண்டும். லக்ஷணை அல்லது குறிப்பினுல் உணர்த்துகின்ற இந்த முறை மூன்று வகைப்படும். அவையாவன : (1) ஜஹல்லக்ஷணை (2) அஜஹல்லக்ஷணை (3) ஜஹத்-அஜஹல்லக்ஷணை.

(1) ஜஹல்லக்ஷணையில் ஒரு வாக்கியத்தின் நேரடியான பொருள் பொருந்தாதாகலின் அப்பொருள் முழுவதும் விட்டுவிடப்படுகிறது. ஜஹத் என்ற சொல்லிற்கு விட்டுவிடுவது என்று பொருள். பின், உட்கருத்து மட்டும் எடுத்துக்கொள்ளப்படுகிறது. உதாரணமாக, "அந்த இடைச்சேரி கங்கையில் இருக்கிறது" என்று ஒருவன் சொன்னுல், இடைச்சேரி கங்கையாற்று நீரின் மேலேயே மிதக்கிறது என்று பொருளில்லை. கங்கைக் கரையிலே அமைந்திருக்கிறது என்றுதான் பொருளாகும். ஆகவே, "கங்கை" என்ற சொல்லினுடைய நேர்ப்பொருளான "கங்கையாற்று நீர்" என்பதை முழுதும் விட்டு விட்டு, "கங்கையாற்றின் கரை" என்ற உட்கருத்தை மட்டில் எடுத்துக் கொள்ளவேண்டும்.

(2) அஜஹல்லக்ஷணையில் வாக்கியத்தின் நேரடியான அர்த்தம் விடப்படுவதில்லை. 'அஜஹத்' என்ருல் விடப் படவில்லை என்று பொருள். நேரடியான அர்த்தத்தை அப்படியே வைத்துக்கொண்டு, அது குறிப்பிடுகிற பொருள் இன்னது என்று லக்ஷணையினுல் உணர்ந்து கொள்ளுகின்ருேம். உதாரணமாக, "சிவப்பு ஓடுகிறது" என்று ஒருவன் சொன்னுல், பொருள் விளங்கவில்லை. இங்கு 'சிவப்பு' என்பதற்குச் 'சிவப்புக் குதிரை' என்று, சந்தர்ப்பத்தை ஒட்டிப் பொருள் கொள்ளவேண்டும். இங்கு 'சிவப்பு' என்ற சொல்லை விடாமலே, 'குதிரை' என்பதையும் சேர்த்து லக்ஷணையினுல் உணர்ந்து கொள்ளுகின்ருேம்.

(3) ஜஹதஜஹல்லக்ஷணையில் வாக்கியத்திலிருக் கின்ற சொற்களின் நேரான அர்த்தங்களில் முரணுன பகுதி இருந்தால், அப்பகுதியை மட்டில் விட்டு விட்டு, அச்சொற்களில் முரணில்லாத பகுதியை மட்டில் எடுத்துக் கொள்ளவேண்டும். உதாரணமாக, "இவன்தான் அந்தத் தேவதத்தன்" என்ற வாக்கியத்தில், இப்பொழுது கண் முன்னுல் இந்த இடத்தில் பார்க்கப்படுகின்ற இந்த தேவதத்தனும், வேறு இடத்தில் வேறு நேரத்தில் பார்க்கப்பட்ட அந்தத் தேவதத்தனும் எப்படி ஒன்ருக இருக்க முடியும்? ஆனுல், உண்மையில் தேவதத்தன் ஒருவன் தானே? ஆகவே, "இவன்தான் அந்த" என்ற சொற்களால் பெறப்படும் கால, தேச வேறுபாடுகளை எடுத்துவிட்டு, எல்லாக் காலங்களிலும் எல்லா இடங் களிலும் ஒருவனுன 'தேவதத்தனை'த்தான் இந்த வாக்கியம் குறிப்பதாக நாம் எடுத்துக்கொள்ளவேண்டும். வெவ்வேறு காலங்களும், வெவ்வேறு இடங்களும் மாற லாம், முரண்படலாம். ஆனுல், இவையெல்லாவற்றிலும் தேவதத்தன் என்பவன் ஒருவன்தான். அவன் மாற

வில்லை. இதுபோலவே, 'நீயும் அதுவே' (தத்வமஸி) என்ற வாக்கியத்திற்கும் ஜஹதஜஹல்லக்ஷணையினுல் பொருள் கொள்ளவேண்டும். 'நீ' என்ற சொல்லினுல் அபரோக்ஷமாகக் குறிக்கப்படும் சிற்றறிவுள்ள ஜீவனும், 'அது' என்ற சொல்லினுல் பரோக்ஷமாகக் குறிக்கப்படும் எல்லாமறிந்த ஈசுவரனும் சுத்த ஆத்ம சைதன்யத்தை ஸ்வரூபமாக உடையவர்கள். பரோக்ஷத்வம், அபரோக்ஷத்வம், சிற்றறிவு, பேரறிவு என்ற இவை போன்ற முரணுன அம்சங்கள் ஒரே சைதன்யத்தில் இருக்க முடியாது. ஆகவே, அவற்றை விட்டு விட்டுப் பொதுவான ஸ்வரூப சைதன்யத்தை மட்டுமே எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம், 'தத்வமஸி' என்ற வாக்கியம் அகண்ட அர்த்தத்தை உடையதாக, அத்விதீய சுத்த சைதன்யத்தைக் குறிப்பதாக இருக்கிறது.

'தத்வமஸி' வாக்கியத்தின் பொருளை உணர்ந்து கொள்ளுவதில் ஜஹல்லக்ஷணையும் அஜஹல்லக்ஷணையும் பொருந்தமாட்டா. "இடைச்சேரி கங்கையில் இருக்கிறது" என்பதுபோலல்ல 'தத்வமஸி' வாக்கியம். கங்கையாற்றின் மேல் இடைச்சேரி இருக்க முடியாது. ஆகையால், 'கங்கையாறு' என்ற நேரடியான பொருளை முழுதும் விட்டு விட்டு, "கங்கைக் கரை" என்று ஜஹல்லக்ஷணையினுல் அர்த்தம் செய்யப்படுகிறது. ஆனுல் 'தத்வமஸி' (நீயும் அதுவே) என்ற வாக்கியத்திலோ, ஒரே சைதன்யத்தில் பரோக்ஷத்வம், அபரோக்ஷத்வம், சிற்றறிவு, பேரறிவு என்ற ஒரு பகுதியிலேதான் முரண்பாடு இருக்கிறது. அதனுல் அதை விட்டுவிடுகிருேம். அர்த்தத்தின் மற்ருெரு பகுதியான சுத்த சைதன்யத்தை அப்படியே வைத்துக்கொண்டு விடுகிருேம். முழு அர்த்தத்தையும் விட்டு விடுவதில்லை. அப்படி விட்டால்தான் அது ஜஹல்லக்ஷணை ஆகும்.

இங்கு ஒரு கேள்வி எழுதல் கூடும். "இடைச்சேரி கங்கையில் இருக்கிறது" என்பதில் "கங்கையாறு" என்ற நேரடியான பொருளை விட்டு விட்டு, "கங்கைக் கரை" என்று லக்ஷணையாக எடுத்துக்கொள்ளவேண்டும் என்று சொன்னீர்கள். அதேபோல, 'நீயும் அதுவே' (தத்வமஸி) என்ற மஹாவாக்கியத்திலும் 'நீ' 'அது' என்ற சொற்களின் நேரடியான பொருளை விட்டு அவற்றின் உட்கருத்தை லக்ஷணையாக எடுத்துக்கொள்ள வேண்டும் என்று ஏன் சொல்லக் கூடாது? 'நீ' என்ற சொல்லுக்கு 'அது' என்ற சொல்லின் பொருளை உட்கருத்தாயும், அதேபோல 'அது' என்ற சொல்லுக்கு 'நீ' என்ற சொல்லின் பொருளை உட்கருத்தாயும் ஏன் கொள்ளக்கூடாது? 'ஜீவன்' (நீ) ஈசுவரனை (அது) லக்ஷணையினுல் குறிப்பதாகவும் ஈசுவரன் (அது) ஜீவனை (நீ) லக்ஷணையினுல் குறிப்பதாகவும் சொல்லலா மல்லவா? அப்பொழுது அது ஜஹல்லக்ஷணையாகத் தானே ஆகும்?

இந்தக் கேள்வி பொருத்தமில்லை. "இடைச்சேரி கங்கையில் இருக்கிறது" என்ற வாக்கியத்தில் 'கரை' என்ற சொல் காணப்படவில்லை. அதை லக்ஷணையாகத் தான் நாம் ஊஹித்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. ஆனுல் 'நீயும் அதுவே' என்ற மஹா வாக்கியத்திலோ 'நீ' 'அது' என்ற சொற்கள் வெளிப்படையாக உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. ஜீவன், ஈச்வரன் என்ற அவற்றின் அர்த்தங்களும் வெளிப்படையாகவே இருக்கின்றன. தங்கள் சொந்த அர்த்தத்தை விட்டு விட்டு, ஒன்று மற்றுென்றை லக்ஷணையினுல் குறிக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆகவேதான் இங்கு ஜஹல்லக்ஷணை பொருந்தாது.

அஜஹல்லக்ஷணேயும் பொருந்தாது. ‘சிவப்பு ஓடு கிறது’ என்பதில், ‘சிவப்பு’ என்ற சொல்லே அப்படியே வைத்துக்கொண்டு லக்ஷணேயினுல் ‘குதிரை’ என்ற சொல்லேப் பெறுகிரேம். சிவப்பு நிறம் மட்டும் ஓடாது. ஆகவே சிவப்புக் குதிரை என்று சேர்த்துக் கொள்ளு கிரேம். இது அஜஹல்லக்ஷணே. ஆனுல், ‘நீயும் அதுவே’ என்ற மஹா வாக்கியத்தில், அபரோக்ஷமாக ‘நீ’ என்று குறிக்கப்படுபவனும் சிற்றறிவு படைத்த வனுமான ஜீவனேப் பார்த்து, பரோக்ஷமாக ‘அது’ என்று குறிக்கப்படுபவரும், பேரறிவு படைத்தவருமான “ஈசுவரனுக நீ இருக்கிருய்” என்று சொல்லுவது முரண்பாடுடையதாகும். இங்கே, பரோக்ஷத்வம், அபரோக்ஷத்வம், சிற்றறிவு, பேரறிவு என்ற முரண் பாட்டை நீக்காமல் வாக்கியம் பொருளாகாது. முரண் பாடு நீங்கி விட்டாலோ, ஜீவன் ஜீவனுக இருக்க மாட்டான்; ஈசுவரன் ஈசுவரனுக இருக்கமாட்டார். இருவருமே அவர்களுடைய ஸ்வரூபமான சுத்த சைதன்ய மாகவே ஆகிவிடுகிருர்கள். ஆகவே ‘நீயும் அதுவே’ என்ற வாக்கியத்தில் முரணுன பகுதியை விட்டு விடத் தான் வேண்டும். இதனுல், இங்கு ஜஹதஜஹல் லக்ஷணே என்ற பாகத்யாகலக்ஷணேதான் பொருந்துமே தவிர அஜஹல்லக்ஷணே பொருந்தாது.

இவ்வாறு உபதேச வாக்கியமான ‘தத்வமஸி’ மஹா வாக்கியத்தின் அகண்ட அர்த்தமான அத்விதீயப் பொருளே உணர்ந்து கொண்டவன் ‘அஹம் ப்ரஹ்ம அஸ்மி’ (நான் பரம்பொருளாகவே இருக்கிறேன்) என்ற அநுபவத்தைப் பெறுகிருன்.

இந்த அநுபவம் அந்தக்கரணம் என்று அழைக்கப் படுகிற மனத்தில் உண்டாகிறது. அகண்டமான பரம்

பொருளைப் பொருளாக உடையதாக இருப்பதால் இந்த மனத்தின் வ்ருத்தி, அகண்டாகாரவ்ருத்தி என்று சொல்லப்படுகிறது. சாதாரணப் பொருள்களைப்பற்றிய அறிவும் அந்தக்கரணம் மூலமாகத்தான் ஏற்படுகிறது. அந்தக்கரணம் ஒளியைப் போன்ற தன்மையுடையதாகையால், புலன்களின் வழி வெளிச்சென்று, பொருள்களை அடைந்து, அவற்றின் உருவத்தை எடுத்துக் கொள்ளுகிறது. ஒரு வாய்க்கால் வழி ஓடும் தண்ணீர் ஒரு வயலை அடைந்து அதன் சதுர வடிவத்தை எடுத்துக் கொள்ளுவதுபோல, பொருள்களின் வடிவத்தை அந்தக்-கரணம் எடுத்துக் கொள்ளுகின்றது. இந்த மாறுதல் அந்தக்கரண-வ்ருத்தி எனப்படுகிறது. இந்த அந்தக்-கரண வ்ருத்தியில் சுத்த ஆத்ம சைதன்யத்தினுடைய பிரதிபிம்பம் விழுகிறது. பொருளைப்பற்றி இதுவரையிருந்த அறியாமை அல்லது அஞ்ஞானம் என்ற திரையை அந்தக்கரண-வ்ருத்தி நீக்கி விடுகிறது. பின், ஆத்ம சைதன்யத்தின் பிரதிபிம்பத்தின் பிரகாசத்தினுல் பொருள் அறியப்படுகின்றது. இந்த அறிவு பலம் (பயன்) என்று சொல்லப்படுகிறது. சாதாரணமாக, பானை, மரம் என்ற பொருள்களைப்பற்றிய அறிவு ஏற்படும் முறை இப்படித்தான்.

அத்விதீயப் பரம்பொருளைப் பொறுத்த வரையில், அந்தக்கரணமானது அத்விதீயப் பரம்பொருளின் 'வடிவத்தை' எடுத்துக்கொள்ளுகிறது. அதாவது, மனது முழுவதையும் பரம்பொருளே வியாபித்துக்கொள்ளுகிறது. அந்தக்கரணத்தின் இந்த நிலை அகண்டாகார வ்ருத்தி எனப்படுகிறது. இந்த வ்ருத்தியினுல், பரம்பொருளைப்பற்றிய அஞ்ஞானம் என்ற திரை நீக்கப்படுகிறது. இந்தத் திரை விலகியவுடன், பரம்பொருட் சைதன்யம் தானுகவே பிரகாசிக்கிறது. பானை, முதலிய

சாதாரணப் பொருள்களின் விஷயத்தில், சைதன்யத்தின் பிரதிபிம்பத்தினுல்தான் அவை தெரியப்படுத்தப்படும். அவை ஜடப்பொருள்களாக இருப்பதே இதற்குக் காரணம். பரம்பொருட் சைதன்யத்தைத் தெரியப்படுத்து வதற்கு வேறெரு சைதன்ய-ப்ரதிபலனம் தேவையில்லை அல்லவா? விளக்குக்கு இன்னெரு விளக்கின் உதவி தேவையில்லை. ஆனுல் அந்தக்கரணத்தின் அகண்டாகார வ்ருத்திமட்டும் வேண்டும். ஏனெனில் இந்த வ்ருத்தி யினுல் பரம்பொருளை மூடியிருக்கிற திரை விலக்கப்படு கிறது. குடத்திலுள்ள விளக்கு தெரியவேண்டுமானுல் குடத்தை உடைக்க வேண்டுமல்லவா? அஞ்ஞானம் என்ற குடத்தை அகண்டாகார-வ்ருத்தி உடைத்தவுடன், அகண்ட சைதன்யம் தானே பிரகாசிக்கிறது. இதைத் தான், அகண்ட சைதன்யம் **பலவ்யாப்யம்** அன்று, கேவலம் அந்தக்கரண-வ்ருத்தி வ்யாப்யம் மட்டும்தான் என்று பரிபாஷையாகச் சொல்லுகிருர்கள். பானை முதலியவை வ்ருத்தி-வ்யாப்யம்மட்டும் அல்ல, பல-வ்யாப்யமும்கூட. "மனதினுல் மட்டுமே அறியப்பட வேண்டும்" என்று பிருஹதாரண்யக சுருதி சொல்லும் பொழுது, அகண்ட சைதன்யம் **வ்ருத்திவ்யாப்யம்** என்று குறிப்பிடுகிறது. "எது மனதினுல் அறியப்படுவ தில்லையோ" என்ற கேனுபநிஷத் சுருதி, ஆத்மா **பலவ்யாப்யம்** அன்று என்று வற்புறுத்துகிறது.

அகண்டாகார வ்ருத்தியினுல் பரம்பொருளைப்பற்றிய அஞ்ஞானம் விலகும்பொழுது அஞ்ஞானத்தின் விளை வாக எழுந்த எல்லாம் நாசமாகின்றன. அகண்டாகார வ்ருத்தியும் நாசமாகின்றது. இந்நிலையில், கண்ணுடி உடைந்தவுடன் அதில் பிரதிபலித்த முகம் மறைந்து, பிரதிபலிக்கப்பட்ட உண்மை முகம் மட்டுமே மிஞ்சுவது

போல, அகண்டாகார வ்ருத்தி நாசமான பிறகு, சுத்த ஆத்ம சைதன்யமே எஞ்சி நிற்கிறது.

வேதாந்த ஸாரத்தின் ஐந்தாவது அத்தியாயத்தில், ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு ஸாதனங்களான ச்ரவண, மனன, நிதித்யாஸனங்களும், எட்டு வகையான யோக மும், ஸமாதி நிலைகளும் விளக்கப்படுகின்றன. ஆருவது அத்தியாயத்தில் ஜீவன் முக்தியும், ஜீவன் முக்தனின் லக்ஷணங்களும், விதேஹ முக்தியும் விளக்கப்படு கின்றன.

## நன்றியுரை

ஸ்ரீ ஸதாநந்தருடைய வேதாந்த ஸாரத்தை மொழி பெயர்ப்பதில் அவ்வப்பொழுது பதங்களின் பொருளை உறுதியாக எடுத்துச் சொல்லி உபகாரம் செய்த பண்டித ராஜ ஸ்ரீ எஸ். ஸுப்ரமண்ய சாஸ்திரிகளுக்கு என்னுடைய மனமார்ந்த நன்றி உரித்தாகின்றது. இந்த மொழி பெயர்ப்புக்குப் பேராதரவு தந்து, நூலை வாசித்து, திருத்தி, அச்சுப்பிழைகளையும் சரிசெய்து உதவிய, ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தின் உதவி காரியதரிசி யான ஸ்ரீ அண்ணு அவர்களுக்கு எனது உளங்கலந்த நன்றி உரித்தாகின்றது. இதைப் பிரசுரம் செய்ய முன் வந்த சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தாருக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். இம் மொழிபெயர்ப் பின் குணச் சிறப்புக்களில் மேற் சொன்ன பெரி யோர்கள் எல்லோருக்குமே பெரும் பங்கு உண்டென்று லும், அதில் ஏதேனும் குற்றங்குறையிருப்பின் அதற்கு

நானே பொறுப்பு என்று தெரிவித்துக்கொள்ளக் கடமைப் பட்டிருக்கிறேன். குற்றம் மறந்து குணத்தை மட்டும் கொள்ளவேண்டும் என்று இதை வாசிக்கும் அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

மதருஸ்
8–12–64

சுந்தரேச ஆத்ரேயன்

## பெயர்ச் சுருக்கங்களின் விவரம்

| | | |
|---|---|---|
| கட உப. | : | கட உபநிஷத் |
| கே. உப. | : | கேனோபநிஷத் |
| சா. உப. | : | சாந்தோக்ய உபநிஷத் |
| ச்வே உப. | : | ச்வேதாச்வதர உபநிஷத் |
| தை. உப. | : | தைத்திரீய உபநிஷத் |
| ப்ரு. உப. | : | ப்ருஹதாரண்யக உபநிஷத் |
| மனு. | : | மனு ஸ்மிருதி |
| மா. உப. | : | மாண்டூக்ய உபநிஷத் |
| மு. உப. | : | முண்டக உபநிஷத் |
| ருக் வே. | : | ருக் வேதம் |

# ॥ वेदान्तसारः ॥

## ॥ प्रथमोऽध्यायः ॥

अखण्डं सच्चिदानन्द-मवाङ्मनसगोचरम् ।
आत्मान-मखिलाधार-माश्रयेऽभीष्टसिद्धये ॥ १ ॥

# வேதாந்த ஸாரம்

## அத்தியாயம் 1

### குரு வணக்கம்

1. என்னுடைய மனோபீஷ்டம் நிறைவேறுவதற்காக, எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவும், மனோவாக்குகளுக்கு எட்டாததாகவும், ஸத்ய – ஞான – ஆனந்த ஸ்வரூபமாகவும், இரண்டற்றதாகவும், விளங்கும் ஆத்மாவை (பரம் பொருளை) சரணமடைகின்றேன்.

अर्थतोऽप्यद्वयानन्दानतीत-द्वैत-भानतः ।
गुरूनाराध्य वेदान्तसारं वक्ष्ये यथामति ॥ २ ॥

2. அத்வயானந்தர் என்ற பெயரின் பொருளுக்கேற்ப த்வைத மோஹத்திலிருந்து விடுபட்டு நிற்கும் ஆசிரியரை வணங்கிவிட்டு, வேதாந்தத்தின் ஸாரத்தை என்னுடைய அறிவிற்கெட்டியவரை விளக்க முற்படுகின்றேன்.

वेदान्तो नामोपनिषत्-प्रमाणं, तदुपकारीणि शारीरक-सूत्रादीनि च ॥ ३ ॥

### வேதாந்தத்தின் விஷயம்

3. வேதாந்தம் உபநிஷத்துக்களை ப்ரமாணமாய்க் கொண்டது என்பது பிரசித்தம்; அவற்றின் பொருளை விளக்க உதவும் சாரீரக ஸூத்ரங்களும் மற்றைய நூல் களும் கூட ப்ரமாணம்.

अस्य वेदान्तप्रकरणत्वात् तदीयैः एव अनुबन्धैः तद्वत्तासिद्धेः न ते पृथगालोचनीयाः ॥ ४ ॥

4. வேதாந்தத்தின் ப்ரகரண நூலாக இது இருக்கின்ற காரணத்தால், வேதாந்தத்தின் அனுபந் தங்கள் என்று சொல்லப்படுபவை இந்த நூலினுடைய நோக்கத்திற்கும் பொருந்தும். ஆகையால் அவற்றைத் தனியே விளக்க அவசியமில்லை.

तत्र अनुबन्धो नाम अधिकारि-विषय-सम्बन्ध-प्रयोजनानि ॥ ५ ॥

5. அனுபந்தங்கள் என்பவை பின்வருமாறு: (1) அதிகாரி (2) விஷயம் (3) ஸம்பந்தம் (4) ப்ரயோஜனம்.

अधिकारी तु विधिवदधीत-वेदवेदांगत्वेनापाततो ऽधिगताखिल-वेदार्थोऽस्मिन् जन्मनि जन्मान्तरे वा काम्य-निषिद्ध - वर्जनपुरःसरं नित्यनैमित्तिक - प्रायश्चित्तोपासनानुष्ठानेन निर्गत - निखिल-कल्मषतया

नितान्त - निर्मलस्वान्तः साधनचतुष्टय - सम्पन्नः प्रमाता ॥ ६ ॥

## வேதாந்தத்தைப் பயிலுவதற்கு வேண்டிய தகுதிகள்

6. (அதிகாரி என்பவன் யார்?) குறிப்பிட்ட முறைப் படி வேதங்களையும் வேதாங்கங்களையும் பயின்று அவற் றின் பொருளைப் பொதுவாக உணர்ந்து கொண்டிருப்பவ னும், இந்தப் பிறவியிலோ முற்பிறவியிலோ காம்ய, நிஷித்த கர்மாக்களைச் செய்யாமையாலும், நித்ய நைமித்திக கர்மாக்களைச் செய்துவருவதாலும், தவத்தினு லும், பக்தியினுலும் வினைப்பயனினின்றும் விடுபட்டு உள்ளத் தூய்மையை முழுவதும் பெற்றிருப்பவனும், நான்கு ஸாதனங்களோடு கூடியிருப்பவனுமே அதிகாரி யாகிருன்.

काम्यानि, स्वर्गादीष्टसाधनानि ज्योतिष्टोमादीनि ॥ ७ ॥

7. சுவர்க்கம் போன்ற இச்சிக்கப்பட்ட பலன்களை அடைவதற்கு வழிகளான ஜ்யோதிஷ்டோமம் முதலிய வேள்விகள் எல்லாம் காம்ய கர்மங்கள் எனப்படும்.

निषिद्धानि, नरकाद्यनिष्टसाधनानि ब्राह्मणहननादीनि ॥

8. நரகம் முதலிய வேண்டாத பலனைக் கொடுக்கக் கூடிய செயல்களான பிராம்மணனைக் கொல்லுதல் முதலியவை நிஷித்த கர்மங்கள் எனப்படும்.

नित्यानि, अकरणे प्रत्यवायसाधनानि सन्ध्या-वन्दनादीनि ॥ ९ ॥

9. செய்யாவிட்டால் துன்பத்தை விளைவிக்கக் கூடியவையும், தினந்தோறும் செய்து முடிக்க வேண்டியவையுமான ஸந்த்யாவந்தனம் முதலியவை நித்ய கர்மங்கள் எனப்படும்.

नैमित्तिकानि, पुत्रजन्माद्यनुबन्धीनि जातेष्टयादीनि ॥

10. மகன் பிறந்தவுடன் செய்யப்பட வேண்டிய ஜாதேஷ்டி போன்று குறிப்பிட்ட காரணங்களால் செய்யப்படும் காரியங்கள் நைமித்திக கர்மங்கள் எனப்படும்.

प्रायश्चित्तानि, पापक्षयसाधनानि चान्द्रायणादीनि ॥ ११ ॥

11. செய்த பாவங்களைக் குறைக்கும் முறையில் செய்யப்படும் சாந்த்ராயணம் போன்ற தவங்கள் ப்ராயச்சித்தம் எனப்படும்.

उपासनानि, सगुणब्रह्मविषय-मानसव्यापाररूपाणि शाण्डिल्यविद्यादीनि ॥ १२ ॥

12. சாண்டில்ய வித்யை (சா. உப. 3–14–4)யைப் போல் ஸகுண ப்ரஹ்மத்தைக் குறித்து மனதினுல் செய்யப்படும் த்யானங்கள் எல்லாம் உபாஸனைகள் எனப்படும்.

एतेषां नित्यादीनां बुद्धिशुद्धिः परं प्रयोजनमुपासनानां तु चित्तैकाग्र्यम् 'तमेतमात्मानं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन (बृ. उप. ४ ४.२२), इत्यादिश्रुतेः 'तपसा कल्मषं हन्ति' (मनु १२.१०४) इत्यादिस्मृतेश्च ॥ १३ ॥

13. இவற்றுள், நித்யகர்மங்களுக்கும் மற்றவை களுக்கும் மனத் தூய்மை முக்கிய பலன். உபா ஸனைகளோ, உள்ள ஒருமைப்பாட்டையே முக்கியமான பலனாக உடையன. "வேள்விகளினாலும் வேதங்களை ஓதுவதினாலும் இந்த ஆத்மாவை ப்ராஹ்மணர்கள் அறிய விரும்புகின்றனர்" (ப்ரு. உப. 4.4.22.) என்பது போன்ற உபநிஷத்து வாக்கியங்களும், "தவத்தினால் பாவங்களைப் போக்கிக்கொள்ளுகின்றான்" (மனு 12.104) என்பது போன்ற ஸ்மிருதி வாக்கியங்களும் இதற்கு ஆதாரம்.

नित्यनैमित्तिकयोः, उपासनानां त्ववान्तरफलं पितृलोक-सत्यलोक-प्राप्तिः, 'कर्मणा पितृलोकः विद्यया देवलोकः' (बृ. उप. १.५ १६) इत्यादिश्रुतेः ॥ १४ ॥

14. மூதாதையர் உலகத்தை அடைவதானது நித்ய, நைமித்திக கர்மங்களினால் வரும் இடையிலுள்ள பலன்; ஸத்யலோகத்தை அடைதல் உபாஸனைகளின் இடையி லுள்ள பலன். "கர்மங்களினால் பித்ருலோகமும் வித்யை (உபாஸனை)யினால் தேவலோகமும்" (ப்ரு. உப. 1.5.16) என்பது போன்ற உபநிஷத் வாக்கியங்கள் இதற்கு ஆதாரம்.

साधनानि—नित्यानित्य-वस्तुविवेकेहामुत्रफलभोग-विराग-शमादिषट्कसम्पत्ति-मुमुक्षुत्वानि ॥ १५ ॥

15. நிலைப்பது, நிலையாதது இவற்றைப் பிரித்து உணர்தல், செய்த வினைகளின் பலனாக இம்மையிலும் மறுமையிலும் விளையக்கூடிய போகங்களில் வெறுப் புணர்ச்சி, சமம் முதலிய ஆறு குணச்சிறப்புக்கள்,

மோக்ஷத்தில் இச்சை, இவை நான்கும் ஸாதனங்கள் எனப்படும்.

नित्यानित्यवस्तु-विवेक-स्तावद् ब्रह्मैव नित्यं वस्तु ततोऽन्यदखिल-मनित्यमिति विवेचनम् ॥ १६ ॥

16. நிலைப்பது, நிலையாதது என்று பிரித்தறியும் உணர்வென்பது யாதெனில், "ப்ரஹ்மமே நிலைத்த வஸ்து; அதைத்தவிர மற்றவையெல்லாம் நிலையாதன" என்று தெளிவதேயாம்.

ऐहिकानां स्रक्चन्दन-वनितादि-विषयभोगानां कर्मजन्यतयानित्यत्वव-दामुष्मिकाणामप्यमृतादिविषय-भोगाना-मनित्यतया तेभ्यो नितरां विरति :—इहामुत्रार्थफल-भोगविरागः ॥ १७ ॥

17. மறுமையில் உண்டாகும் அமிருதம் அருந்துதல் போன்ற ஸ்வர்க்க போகம் முதலியவையும், இம்மை போகப்பொருள்களான மலர் மாலை, சந்தனம், ஸ்த்ரீ முதலிய சிற்றின்பங்கள் இவற்றைப்போலவே நிலையாதனவே; காரணம், இவை யாவும் (மனிதன் செய்யும்) வினையின் பயன்களாக இருப்பதேயாம்; இவற்றை அறவே வெறுத்து ஒதுக்குவதே, இம்மையிலும் மறுமையிலும் உண்டாகக்கூடிய வினைப்பயன்களின் போகத்தை விட்டுவிடுதல் என்பதன் பொருள்.

शमादयस्तु—शम-दम-उपरति-तितिक्षा-समाधान-श्रद्धाख्याः ॥ १८ ॥

18. சமம் முதலியது என்பன :—(1) சமம் (2) தமம் (3) உபரதி (4) திதிக்ஷா (5) ஸமாதானம் (6) சிரத்தை.

शमस्तावत्—श्रवणादि - व्यतिरिक्त - विषयेभ्यो मनसो निग्रहः ॥ १९ ॥

19. சமம் என்பது :—சாஸ்திரங்களைக் கேட்பது முதலியவற்றைத் தவிர, வேறு விஷயங்களில் மனம் செல்லாமல் கட்டுப்படுத்துதல்.

दम :— बाह्येन्द्रियाणां तद्व्यतिरिक्त-विषयेभ्यो निवर्तनम् ॥ २० ॥

20. தமம் என்பது :—சாஸ்திரங்களைக் கேட்பது முதலியவற்றைத் தவிர, வேறு விஷயங்களில் புறப் புலன்கள் செல்லாமல் தடுத்தல்.

निवर्तिताना-मेतेषां तद्व्यतिरिक्त-विषयेभ्य उपरमणमुपरति-रथवा विहितानां कर्मणां विधिना परित्यागः ॥ २१ ॥

21. சாஸ்திரங்களைக் கேட்பது முதலியனவற்றைத் தவிர, வேறு விஷயங்களில் கட்டுப்படுத்தப்பட்ட மனம் மீண்டும் செல்லாமல் நிறுத்துவது உபரதியாகும். அல்லது, சாஸ்திர முறைப்படி, விதிக்கப்பட்ட கர்மானுஷ்டானங்களை (காரியங்களை)த் தியாகம் செய்துவிடுதலே உபரதி என்றும் பொருள் கொள்ளலாம்.

तितिक्षा—शीतोष्णादि-द्वन्द्वसहिष्णुता ॥ २२ ॥

22. சூடு, குளிர்ச்சி என்னும் இரட்டை உணர்ச்சிகளைப் பொறுத்துக்கொள்ளும் பான்மை திதிக்ஷா எனப்படும்.

निगृहीतस्य मनसः श्रवणादौ तदनुगुणविषये च समाधिः—समाधानम् ॥ २३ ॥

23. இவ்வாறு கட்டுப்பட்ட மனதை, சாஸ்திரங்களைக் கேட்பதிலும், மற்றும் அதற்கு உதவியான வேறு நல்லியல்புகளிலும் நிலைநிறுத்துவதே ஸமாதானம் எனப்படும்.

गुरूपदिष्ट-वेदान्त-वाक्येषु विश्वासः—श्रद्धा ॥ २४ ॥

24. குருவினால் சொல்லப்பட்ட வேதாந்த வாக்கியங்களில் நம்பிக்கை ச்ரத்தை எனப்படும்.

मुमुक्षुत्वं—मोक्षेच्छा ॥ २५ ॥

25. விடுதலை பெறவேண்டும் என்ற ஆசை முமுக்ஷுத்வம் ஆகும்.

एवंभूतः प्रमाता अधिकारी "शान्तो दान्त" (बृ.उप. ४.४.२३) इत्यादिश्रुतेः। उक्तं च—

"प्रशान्तचित्ताय जितेन्द्रियाय च प्रहीणदोषाय यथोक्तकारिणे। गुणान्वितायानुगताय सर्वदा प्रदेयमेतत् सततं मुमुक्षवे ॥" इति (उपदेश-साहस्री ३२४) ॥

26. இத்தகைய மாணவனே தகுதியுடையவனாகிறான். "சம தமாதி குணங்களையுடையவன்" (ப்ரு. உப. 4.4.23) என்று உபநிஷத்துச் சொல்லியிருப்பதே இதற்குக் காரணம். மேலும், "யார் அமைதியான மனதோடு இருக்கிறானோ, புலன்களை வென்றவனோ, குற்றங்களிலிருந்து விடுபட்டு நிற்கிறானோ, கடமையைச் செய்பவனோ, குணங்கள் நிரம்பப் பெற்றவனோ, ஒத்து நடந்து

கொள்பவனே, விடுதலையில் ஆசைகொண்டவனே அவனுக்கே எப்போதும் இது சொல்லப்படவேண்டும்" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. (உபதேச ஸாஹஸ்ரீ 324)

विषयः—जीवब्रह्मैक्यं शुद्धचैतन्यं प्रमेयं तत्र एव वेदान्तानां तात्पर्यात् ॥ ॥ २७ ॥

### விஷயம்

27. ஜீவனும், தூய அறிவான ப்ரஹ்மமும் ஒன்று என்பது விஷயமாகும், இதுவே வேதாந்தங்களின் உட்கருத்தாதலால்.

सम्बन्धस्तु—तदैक्यप्रमेयस्य तत्प्रतिपादकोपनिषत्-प्रमाणस्य च बोध्यबोधक भावः ॥ ॥ २८ ॥

### ஸம்பந்தம்

28. தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம், அதைத் தெரியப்படுத்தும் ஸாதனம் இவையிரண்டிடையேயும் உள்ளதொரு தொடர்பைப்போன்று, [ஜீவ-ப்ரஹ்ம] ஒருமை, அதைத் தெரிவிக்கும் உபநிஷத்துக்கள் இவையிடையே உள்ளதொரு தொடர்பே ஸம்பந்தம் எனப்படும்.

प्रयोजनं तु—तदैक्यप्रमेयगताज्ञाननिवृत्तिः स्वस्व-रूपानन्दावाप्तिश्च "तरति शोकम् आत्मवित् (छा. उप. ७.१.३) इत्यादि श्रुतेः "ब्रह्म वेद ब्रह्मैव भवति" (मु. उप. ३.२.९) इत्यादिश्रुतेश्च ॥ २९ ॥

### ப்ரயோஜனம்

29. (ஜீவ-ப்ரஹ்ம) ஒருமையினுல் ஏற்படும் அஞ்ஞானத்தின் அழிவும், தனது இயற்கையான பேரின்பத்தைப் பெறுவதுமே ப்ரயோஜனம் (பயன்) எனப்படும். "ஆத்மாவைத் தெரிந்துகொண்டவன் துன்பத்தைத் தாண்டிவிடுகிருன்" (சா. உப. 7.1.3) என்றும், "ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொண்டவன் ப்ரஹ்மமாகவே ஆகிருன்" (மு. உப. 3.2.9) என்றும் சுருதி இருப்பது காண்க.

अयमधिकारी जननमरणादि - संसारानल-सन्तप्तो दीप्तशिरा जलराशिमिवोपहारपाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठं गुरु-मुपसृत्य तमनुसरति "तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठं" (मु. उप. १.२.१२) इत्यादिश्रुतेः ॥ ३० ॥

### ஆசிரியனின் அவசியம்

30. எவ்வாறு தலையில் தீப் பற்றிக்கொண்ட ஒருவன் நீர்நிலையைக் குறித்துப் பாய்வானே, அதுபோலப் பிறப்பு, இறப்பாகிற தீயினுல் சுடப்பட்டு வேதாந்த வித்யைக்குத் தகுதிபெற்ற ஒருவன், கையுறையுடன், வேதங்களைக் கற்றுணர்ந்து ப்ரஹ்ம நிஷ்டஞக இருக்கின்ற குருவை அடைந்து சேவை செய்யவேண்டும். "இதை அறிந்து கொள்வதற்காக அவன் (மாணவன்) கையில் ஸமித்துடன், வேதங்களைக் கற்றுணர்ந்து ப்ரஹ்மத்திலேயே நிலைபெற்றிருப்பவஞகிய குருவை அடைவாஞக" (மு. உப. 1.2.12) என்று உபநிஷத்தும் கூறுகிறது.

स गुरुः परमकृपयाध्यारोपापवाद-न्यायेनैनमुपदिशति—"तस्मै स विद्वानुपसन्नाय सम्यक् प्रशान्तचित्ताय शमान्विताय। येनाक्षरं पुरुषं वेद सत्यं प्रोवाच तां तत्त्वतो ब्रह्मविद्याम्॥" (मु. उप. १.२.१३) इत्यादिश्रुतेः ॥ ३१ ॥



31. அந்தக் குருவானவர் மிகுந்த அருளுடன், அத்யாரோபம் - அபவாதம் என்ற முறையில் இவனுக்கு உபதேசம் செய்கிறார். "உரிய வணக்கத்தோடு மிகுந்த மன அமைதியைப் பெற்றவனும் புலன்களை அடக்கியவனுமாகித் தன்னை அண்டிய மாணவனுக்கு, விவேகியான ஆசிரியர், எதனால் அழிவற்றதும் உள்ளதுமான பரம் பொருளை உணர்ந்து கொள்ளுவானோ அந்த அறிவை உண்மையாக உபதேசிக்கவேண்டும்" என்று உபநிஷத்து சொல்லுகிறது (மு. உப. 1.2.13).

॥ द्वितीयोऽध्यायः ॥

असर्पभूतायां रज्जौ सर्पारोपवत् वस्तुनि अवस्त्वारोपः—अध्यारोपः ॥ ३२ ॥

## அத்தியாயம் 2

### அத்யாரோப விளக்கம்

32. பாம்பைவிட வேறான கயிற்றைப் பாம்பு என்று பார்ப்பதுபோல, உள்ள வஸ்துவில் இல்லாத ஒன்றை ஏற்றி வைத்துப்பார்ப்பது அத்யாரோபம் எனப்படும்.

वस्तु—सच्चिदानन्दमद्वयं ब्रह्म ; अज्ञानादि सकलजडसमूहोऽवस्तु ॥ ३३ ॥

33. ஸத், சித், ஆனந்தம் எனப்படும் ப்ரஹ்மமே வஸ்து எனப்படுகிறது ; அஞ்ஞானம் முதலிய எல்லா ஜடப்பொருள்களின் கூட்டம் அவஸ்து எனப்படுகிறது.

अज्ञानं तु सदसद्भ्या-मनिर्वचनीयं त्रिगुणात्मकं ज्ञानविरोधि, भावरूपं यत्किञ्चिदिति वदन्त्यह-मज्ञ इत्याद्यनुभवात् "देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम्" (श्वे. उप. १.३) इत्यादिश्रुतेश्च ॥ ३४ ॥

34. அஞ்ஞானம் என்பது, இருக்கிறது, இல்லை என்று விண்டு சொல்ல முடியாதபடி அனிர்வசனீய மானது, முக்குணங்களால் ஆனது, ஞானத்திற்கு எதிரி, தோற்றமுள்ளது என்று சொல்லுகிறார்கள். "நான் தெரியாதவன்" என்ற அநுபவமும், "தன் குணங்களுக் குள் தானே மறைந்து நிற்கின்றதும், இறைவனிடத்தே உறைகின்றதுமானதொரு சக்தி" (ச்வே. உப. 1.3) என்ற உபநிஷத்து வாக்கியமும் இதற்குச் சான்றுகள்.

इदमज्ञानं समष्टि-व्यष्टि-अभिप्रायेणैक-मनेकमिति च व्यवह्रियते ॥ ३५ ॥

## வியஷ்டியும் தொகுதியும்

35. கூட்டாகவோ, தனித்தோ பார்க்கின்ற பான் மையை ஒட்டி இந்த அஞ்ஞானம் ஒன்றென்றோ பல வென்றோ பேசப்படுகின்றது.

तथा हि यथा वृक्षाणां समष्टयभिप्रायेण वनमित्येकत्वव्यपदेशो, यथा वा जलानां समष्टयभिप्रायेण जलाशय इति, तथा नानात्वेन प्रतिभासमानानां जीवगताज्ञानानां समष्टयभिप्रायेण तदेकत्व-व्यपदेशः "अजामेकां" (श्वे. उप. ४ ५.) इत्यादि श्रुतेः ॥ ३६ ॥

36. எப்படி மரங்களெல்லாம் கூட்டாகக் காடு என்று ஒருமையில் பேசப்படுகின்றனவோ, ஜலங்களெல்லாம் குளம், ஏரி என்று ஒரு தொகுதியாகக் குறிப்பிடப்படுகின்றனவோ, அவ்வாறே ஜீவர்களிடத்து உறைகின்ற அஞ்ஞானம் பலவகையாகத் தோற்றங்கொண்டு ஒன்று என்று ஒருமையில் பேசப்படுகின்றது. "பிறப்பில்லாத, ஒன்றை" (ச்வே. உப. 4.5) என்பதுபோன்ற உபநிஷத் வாக்கியங்களே இதற்கு உதாரணம்.

इयं समष्टिरुत्कृष्टोपाधितया विशुद्धसत्त्व-प्रधाना ॥ ३७ ॥

37. இந்த அஞ்ஞானத்தின் தொகுதியானது (பிரம்மத்தின்) பரிபூரணத்தோடு சேர்ந்திருப்பதால் தூய ஸத்வ குணம் மலிந்து காணப்படுகின்றது.

एतदुपहितं चैतन्यं सर्वज्ञत्व-सर्वेश्वरत्व-सर्वनियन्तृत्वादि-गुणक-मव्यक्त-मन्तर्यामी जगत्कारणमीश्वर इति च व्यपदिश्यते सकलाज्ञानावभासकत्वात् । "यः सर्वज्ञः सर्ववित्" (मु. उप. १.१.९) इति-श्रुतेः ॥ ३८ ॥

38. இந்த அஞ்ஞானத் தொகுதியோடு கூடிய சித் (ப்ரஹ்மம்) ஆனது, எல்லாவற்றையும் தெரிந்து கொண்ட

அறிவு, எல்லாவற்றிற்கும் தலைவனாக இருத்தல், எல்லாவற்றையும் ஏற்று நடத்தும் ஆற்றல், முதலிய குணங்களைப் பெற்றதாய், மறைந்த வடிவுடையதென்றும், அந்தர்யாமியென்றும், உலகிற்குக் காரணமென்றும், அஞ்ஞானத் தொகுதியையும் பிரகாசிக்கச் செய்து கொண்டு நிற்பதால் ஈச்வரன் என்றும் குறிப்பிடப்படுகிறது. "எவர் எல்லாவற்றையும் பொதுவாகவும் தனித் தனியாகவும் அறிந்தவரோ" (மு. உப. 1.1.9) என்று உபநிஷத்தும் கூறுகிறது.

ईश्वरस्येयं समष्टि-रखिलकारणत्वात्, कारणशरीर-मानन्दप्रचुरत्वात् कोशवदाच्छादकत्वाच्चानन्दमय-कोशः, सर्वोपरमत्वात् सुषुप्ति-रत एव स्थूलसूक्ष्म-प्रपञ्चलयस्थानमिति च उच्यते ॥ ३९ ॥

39. ஈச்வரனோடு கூடிய இந்த அஞ்ஞானத்தின் தொகுதியானது, எல்லாவற்றிற்கும் காரணமாகவிருத்தல் பற்றிக் காரண சரீரமாகவும் சொல்லப்படுகிறது. ஆனந்தம் நிரம்பியதாக இருப்பதாலும், ஓர் உறைபோல மூடிக் கொண்டிருப்பதாலும் இது ஆனந்த மயகோசம் என்றும் அழைக்கப்படுகிறது. இதனுள் எல்லாம் ஒடுங்குவதால் இது தூக்கம் என்றும்கூட சொல்லப்படுகிறது. இந்தக் காரணம் பற்றியே கருப்பொருள், பருப்பொருள் இவற்றின் ஒடுக்கநிலை என்றும் அது குறிப்பிடப் படுகிறது.

यथा वनस्य व्यष्टयभिप्रायेण वृक्षा इत्यनेकत्व-व्यपदेशो यथा वा जलाशयस्य व्यष्टयभिप्रायेण जलानीति, तथाऽज्ञानस्य व्यष्टयभिप्रायेण तदनेकत्वव्यपदेशः " इन्द्रो

मायाभिः पुरुरूप ईयते" (ऋग्वेदः ६.४७.१८) इत्यादि श्रुतेः ॥ ॥ ४० ॥

40. எவ்வாறு தனித்தனியாக நோக்குமிடத்து ஒரு காடு என்பது பல மரங்கள் என்று பன்மையாகச் சொல்லப்படுகிறதோ, ஒரு நீர்நிலையானது ஜலங்கள் என்று பன்மையாகச் சொல்லப்படுகின்றதோ, அது போலவே தனித்தனியாக நோக்குமிடத்து அஞ்ஞானமும் பல என்று பன்மையில் பேசப்படுகிறது. "இந்திரன் (ஈச்வரன்) மாயைகளினுல் பல உருவங்களாகத் தோன்று கிருன்" (ருக்வே. 6.47.18) என்பது போன்ற சுருதி வாக்கியங்களிருப்பதும் காண்க.

अत्र व्यस्तसमस्तव्यापित्वेन व्यष्टिसमष्टिता-व्यपदेशः ॥ ४१ ॥

41. தனித்தனிப் பொருள்களேயோ அல்லது மொத்த மாகத் தொகுதியையோ வியாபித்து நிற்கும் வகையால் பலவாகவும் ஒன்ருகவும் அஞ்ஞானம் குறிப்பிடப் படுகிறது.

इयं व्यष्टि-र्निकृष्टोपाधितया मलिनसत्त्वप्रधाना ॥ ४२ ॥

42. தனிப்பட்ட அஞ்ஞானம், கீழான ஜீவனுடன் சேர்க்கையால் மலின ஸத்வம் மிகுந்து காணப்படுகிறது.

एतदुपहितं चैतन्य-मल्पज्ञत्वानीश्वरत्वादि-गुणकं प्राज्ञ इत्युच्यत एकाज्ञानावभासकत्वात् ॥ ४३ ॥

43. இதனேடு (அதாவது ஜீவனது அஞ்ஞானத் தோடு) சேர்ந்த சைதன்யம் அல்லது பேருணர்வானது

குறைந்த அறிவையுடையதாகவும், ஆட்சி செய்யும் ஆற்றல் இல்லாததாகவும் ஆகிறது. தனிப்பட்ட ஒவ்வொரு ஜீவனின் அஞ்ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்வதால் இது ப்ராக்ஞன் என்று அழைக்கப்படுகிறது.

अस्य प्राज्ञत्व-मस्पष्टोपाधितया-नतिप्रकाशकत्वात् ॥ ४४ ॥

44. தெளிவில்லாத ஒரு உபாதியோடு சேர்ந்து ப்ரகாச சக்தி குறைந்து காணப்படுவதால் இதற்குப் ப்ர - அக்ஞத்வம் ஏற்பட்டது.

अस्यापीय-महंकारादि-कारणत्वात् कारणशरीर-मानन्द - प्रचुरत्वात् कोशवदाच्छादकत्वाच्चानन्दमय-कोशः सर्वोपरमत्वात् सुषुप्ति-रत एव स्थूलसूक्ष्मशरीर-प्रपञ्चलयस्थानमिति च उच्यते ॥ ४५ ॥

45. தான் என்னும் அஹம்-கார உணர்ச்சிக்குக் காரணமாக இருப்பதால், ஜீவனோடு கூடிய அஞ்ஞானம், காரண சரீரம் என்று அழைக்கப்படுகிறது ; ஆனந்தம் நிரம்பியிருப்பதாலும் ஓர் உறையைப்போல மூடிக்கொண்டிருப்பதாலும் ஆனந்த மயகோசம் என்றும், அது குறிப்பிடப்படுகிறது. மேலும் அதனுள் எல்லாம் ஒடுங்குவதால் கனவில்லாத தூக்கம் என்றும் அது அறியப்படுகிறது. இது காரணம் பற்றியே, கருப்பொருள், பருப்பொருள் இவற்றின் ஒடுக்கநிலை என்றும் அது சொல்லப்படுகிறது.

तदानीमेतावीश्वरप्राज्ञौ चैतन्यप्रदीप्ताभि-रति-सूक्ष्माभि-रज्ञानवृत्तिभि-रानन्दमनुभवतः “आनन्दभुक् चेतोमुखः प्राज्ञः” (मा. उप. ५) इति श्रुतेः, सुखमह-

मस्वाप्सम्, न किंचि-दवेदिष-मित्युत्थितस्य परामर्शोप-पत्तेश्च ॥ ४६ ॥

46. கனவில்லாத தூக்க நிலையில் ஈச்வரனும் ப்ராக்ஞனும், பேருணர்வினுல் பிரகாசிப்பிக்கப்பட்ட அஞ்ஞானத்தின் ஒரு நுட்பமான இயக்கத்தினுல் ஆனந்தத்தை நுகருகின்றனர். "ஆனந்தத்தை நுகர்பவன், அறிவின் முகம், ப்ராக்ஞன்" (மா. உப. 5) என்ற சுருதியும், "நன்ருகத் தூங்கினேன்; ஒன்றையும் அறிந்தேனில்லை" என்று கனவில்லாத தூக்கத்தினின்றும் விழித்தெழுந்த ஒருவனது அநுபவமும் இங்கு (சான்ருக) உள்ளன.

अनयोः समष्टिव्यष्टयो-र्वनवृक्षयोरिव जलाशय-जलयोरिव वाभेदः ॥ ४७ ॥

47. காட்டையும் (அதிலிருக்கும்) மரங்களையும்போல, நீர்நிலையையும் அதனுள்ளிருக்கும் ஜலத்தையும்போல, தனித்தனி அஞ்ஞானங்களும் அஞ்ஞானத் தொகுதியும் ஒன்றே.

एतदुपहितयो-रीश्वरप्राज्ञयोरपि वनवृक्षावच्छिन्नाकाशयोरिव जलाशय-जलगत-प्रतिबिम्बाकाशयोरिव वाभेदः "एष सर्वेश्वर एष सर्वज्ञ एषोऽन्तर्याम्येष योनिः सर्वस्य प्रभवाप्ययौ हि भूतानाम्" (मा. उप. ६) इत्यादि श्रुतेः ॥ ४८ ॥

48. எவ்வாறு ஒரு காட்டினுல் வரையறுக்கப்பட்ட ஆகாயமானது, மரங்களினுல் வரையறுக்கப்பட்ட ஆகாயத்தைவிட வேருனதில்லையோ, எவ்வாறு (தனித்தனி)

ஜலங்களில் பிரதிபலிக்கும் ஆகாயமும் (மொத்த) நீர்த் தொகுதியில் பிரதிபலிக்கும் ஆகாயமும் ஒன்று கவே இருக்கின்றனவோ, அதுபோல, தனி அஞ் ஞானங்கள், அஞ்ஞானத்தொகுதி இவற்றோடு முறையே கூடிய ஜீவன், ஈச்வரன் இவர்களுக்குள் பேதமில்லை. "இவர் எல்லாவற்றிற்கும் தலைவர்; இவர் எல்லா மறிந்தவர்; இவர் எல்லாவற்றிற்குள்ளும் உறைபவர்; இவர் எல்லாவற்றிற்கும் தோற்றுவாய்; இவரே எல்லாப் பொருள்களுடைய தோற்றத்துக்கும் மறைவுக் கும் காரணமானவர்" (மா. உப. 6) என்பது போன்ற உபநிஷத் வாக்கியங்களும் உள்ளன.

वनवृक्ष-तदवच्छिन्नाकाशयो-र्जलाशय-जलतद्गत-प्रतिबिम्बाकाशयोर्वाधारभूतानुपहिताकाशव-दनयोरज्ञा-नतदुपहित-चैतन्ययो-राधारभूतं यदनुपहितं चैतन्यं तत्तुरीयमित्युच्यते "शान्तं शिवमद्वैतं चतुर्थं मन्यन्ते स आत्मा स विज्ञेयः" (मा. उप. ७) इत्यादि श्रुतेः ॥

### துரீயத்தின் தன்மை

49. காடு, (அதிலிருக்கும்) மரங்கள் இவற்றால் வரை யறுக்கப்பட்ட ஆகாயத்திற்கும் ஜலத்திலும் நீர்நிலையி லும் பிரதிபலிக்கும் ஆகாயத்திற்கும், எல்லையில்லாத ஆகாயம் ஆதாரமாக இருப்பதுபோல, தனித்தனியாக (ஜீவர்களிடத்துக் காணப்படும்) அஞ்ஞானத்திற்கும், (மொத்தமான) அஞ்ஞானத் தொகுதிக்கும், அதேபோல இவற்றோடு கூடிய சைதன்யங்களுக்கும் (ஈச்வரன், ஜீவன்) எல்லையில்லாததொரு சைதன்யம் (பேருணர்வு) ஆதாரமாக இருக்கிறது. இதுவே 'துரீயம்' எனப்படு

கிறது. "எது சாந்தமாகவும் மங்கள ஸ்வரூபமாகவும், இரண்டற்றதாகவும் உளதோ அதை நான்காவதாக எண்ணுகிறார்கள். அதுவே ஆத்மா; அதுவே அறியப் படவேண்டியது," (மா. உப. 7) என்று சுருதியும் இருக் கிறது.

इदमेव तुरीयं शुद्धचैतन्यमज्ञानादि-तदुपहित-चैतन्याभ्यां तप्तायःपिण्डवदविविक्तं सन्महावाक्यस्य वाच्यं विविक्तं सल्लक्ष्यमिति चोच्यते ॥ ५० ॥

50. நான்காவதான இந்தத் தூய பேருணர்வே, பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பு உருண்டையைப்போல, அஞ்ஞானத்திலிருந்தும், அஞ்ஞானத்தோடு சேர்ந்த சைதன்யங்களிலிருந்தும் (ஈச்வரன், ஜீவன்) பிரித்து அறியப்படாதபொழுது, மஹா வாக்யத்தின் நேரடியான பொருளாகிறது; (மாறாக), பிரித்து அறியப்படும்பொழுது, (மஹா வாக்யத்தின்) உட்கருத்தாகிறது.

अस्याज्ञानस्यावरण-विक्षेपनामक - मस्ति शक्ति-द्वयम् ॥ ५१ ॥

### அஞ்ஞானத்தின் சக்திகள்

51. இந்த அஞ்ஞானத்திற்கு ஆவரணம், விக்ஷேபம் என்ற இரு சக்திகள் உண்டு.

आवरणशक्तिस्तावदल्पोऽपि मेघोऽनेकयोजना-यत-मादित्यमण्डल-मवलोकयितृ-नयनपथ-पिधायकतया यथाच्छादयतीव तथाज्ञानं परिच्छिन्नमप्यात्मान-मपरिच्छिन्न - मसंसारिण - मवलोकयितृ-बुद्धिपिधायक-

तयाच्छादयतीव तादृशं सामर्थ्यम्। तदुक्तं–"घनच्छन्न-दृष्टि-र्घनच्छन्नमर्कं यथा मन्यते निष्प्रभं चातिमूढः। तथा बद्धवद्भाति यो मूढदृष्टेः स नित्योपलब्धि-स्वरूपोऽहमात्मा।" इति (हस्तामलकम् 10) ॥ ५२ ॥

52. எவ்வாறு ஒரு சிறிய மேகத் திட்டானது, பார்க்கின்றவனின் பார்வையை மறைப்பதன் மூலம், பல யோஜனைகள் தூரம் பரவியிருக்கும் சூரிய மண்டலத்தை மறைப்பது போலக் காண்கின்றதோ, அதேபோல ஒரு அளவிற்குட்பட்ட அஞ்ஞானமும் பார்ப்பவனின் பார்வையை மறைப்பதன் மூலம், எல்லையில்லாததும், பிறப்பு இறப்பு இல்லாததுமான ஆத்மாவை மறைப்பதுபோலக் காணப்படுகிறது. இத்தகையதொரு சக்திதான் ஆவரணம் எனப்படுகிறது.

"எப்படி மேகத்தால் மறைக்கப்பட்ட பார்வையையுடைய ஓர் அறியாதவனுக்கு, மேகத்தால் மறைக்கப்பட்டது போலவும், ஒளி குன்றியது போலவும் சூரியன் தோன்றுகிறதோ, அவ்வாறே, அறியாதவனுடைய பார்வையில் (பிறப்பிறப்பாகிற தளையால்) கட்டுண்டது போலத் தோன்றும் அது என்னுடைய ஸ்வரூபமாகும்; அது ஆத்மா; அழியாத பேருணர்வு" என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. (ஹஸ்தாமலகம் :10)

अनया आवृतस्यात्मनः कर्तृत्व-भोक्तृत्व सुखित्व-दुःखित्वादि-संसारसम्भावनापि भवति यथा स्वाज्ञानेनावृतायां रज्ज्वां सर्पत्व-संभावना ॥ ५३ ॥

53. எப்படி ஒரு கயிறுனது ஒருவனுடைய அஞ்ஞானத்தின் ஆவரண சக்தியால் பாம்பாகத் தோன்று

கிறதோ, அதுபோல இதனுல் (அஞ்ஞானத்தின் ஆவரண சக்தியால்) மறைக்கப்பட்ட ஆத்மா 'நான் செய்பவன்' (கர்த்தா) என்றும், 'நான் அநுபவிப்பவன்' (போக்தா) என்றும், இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவிக்கிற வன் என்பதுமாகிய ஸம்ஸாரித்வத்தை (பிறப்பிறப்புக்கு உட்பட்டிருக்கும் தன்மையை) எய்துகிறது.

विक्षेपशक्तिस्तु यथा रज्ज्वज्ञानं स्वावृतरज्जौ स्वशक्तया सर्पादिक-मुद्भावयत्येव-मज्ञानमपि स्वावृतात्मनि स्वशक्त्याकाशादि-प्रपञ्चमुद्भावयति तादृशं सामर्थ्यम् । तदुक्तं —"विक्षेपशक्तिर्लिङ्गादि ब्रह्माण्डान्तं जगत् सृजेत्" इति । (वाक्यसुधा ५,१३) ॥ ५४ ॥

54. எவ்வாறு கயிற்றைக் குறித்த அஞ்ஞானமானது தன்னகத்தே கொண்ட சக்தியால் தன்னுல் மறைக்கப் பட்ட கயிற்றில் பாம்பைத் தோற்றுவிக்கிறதோ, அது போல அஞ்ஞானம் (அல்லது மாயையும்) தன்னுடைய சொந்த சக்தியால், தன்னுல் மறைக்கப்பட்ட ஆத்மாவில் ஆகாயம் முதலிய பூதங்களைத் தோற்றுவிக்கிறது. இதுவே விக்ஷேப சக்தி எனப்படும். "நுட்பமான (ஸூக்ஷ்ம) பொருள்களிலிருந்து அண்ட பகிரண்டங்கள் ஈருக எல்லாவற்றையும் இந்த விக்ஷேப சக்தி தோற்று விக்கிறது", (வாக்யஸுதா, 5, 13) என்று கூறப்பட்டிருக் கிறது.

शक्तिद्वयवदज्ञानोपहितं चैतन्यं स्वप्रधानतया निमित्त स्वोपाधिप्रधानतयोपादानञ्च भवति ॥ ५५ ॥

55. இந்த இரண்டு சக்திகளைப் பெற்ற அஞ்ஞானத் தோடு கூடிய சைதன்யமானது தன்னைப் பொறுத்த மட்

டில் நோக்குமிடத்து உலகத்திற்கு நிமித்த காரணமாக வும், அஞ்ஞானத்தோடு கூடிய நிலையில் வைத்துப் பார்க்குமிடத்து உபாதான காரணமாகவும் ஆகிறது.

यथा लूता तन्तुकार्यं प्रति स्वप्रधानतया निमित्तं स्वशरीरप्रधानतयोपादानञ्च भवति ॥ ५६ ॥

56. எவ்வாறு சிலந்தியானது, தன்னைப் பொறுத்த மட்டில் நோக்குமிடத்து அதன் வலைக்கு நிமித்த காரண மாகவும், அதனுடைய உடலை (உமிழ் நீரை) வைத்து நோக்குமிடத்து உபாதான காரணமாகவும் ஆகிறதோ, (அவ்வாறே இங்கும்).

तमः-प्रधानविक्षेपशक्तिमद्-ज्ञानोपहित - चैतन्या-दाकाश आकाशाद्वायु-र्वायोरग्नि-रग्ने-रापोऽद्भ्यः पृथिवी चोत्पद्यते "एतस्मादात्मन आकाशः सम्भूतः" (तै. उप. २.१.१) इत्यादिश्रुतेः ॥ ५७ ॥

57. தமோ குணம் மிகுந்த அஞ்ஞானத்தின் விக்ஷேப சக்தியோடு கூடிய சைதன்யத்திலிருந்து (ஆத் மாவிலிருந்து) ஆகாயமும், ஆகாயத்திலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து மண்ணும் உண்டாயின. "இந்த ஆத்மாவிலிருந்து ஆகாயம் உண்டாயிற்று" (தை. உப. 2.1.1) என்பது போன்ற சுருதியுமிருக்கின்றது.

तेषु जाड्याधिक्य-दर्शनात्तमः-प्राधान्यं तत्कारणस्य । तदानीं सत्त्वरजस्तमांसि कारणगुणप्रक्रमेण तेष्वाका-शादिषूत्पद्यन्ते ॥ ५८ ॥

58. மிகுதியான தாமஸ குணம் இவைகளிலே காணப்படுவதால், அவற்றிற்குக் காரணமான பொருளும் தாமஸம் நிறைந்திருக்க வேண்டும். அப்பொழுது (படைப்பின்போது) ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற குணங்கள், 'காரணத்திலே இருக்கின்ற குணங்கள் காரியத்திலே இருக்கின்ற குணங்களை நிர்ணயிக்கின்றன' என்ற நியதியையொட்டி ஆகாயம் முதலியவற்றிலே சேர்க்கப்படுகின்றன.

एतान्येव सूक्ष्म-भूतानि तन्मात्राण्यपञ्चीकृतानि चोच्यन्ते ॥ ५९ ॥

59. ஸூக்ஷ்ம பூதங்கள், தன்மாத்திரைகள், ஐந்து விதமாகக் கலக்கப்படாத (அபஞ்சீக்ருத) மூலப்பொருள்கள் என்று இவை சொல்லப்படுகின்றன.

एतेभ्यः सूक्ष्मशरीराणि स्थूलभूतानि चोत्पद्यन्ते ॥ ६० ॥

60. இந்த ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து ஸூக்ஷ்ம சரீரங்களும் ஸ்தூல பூதங்களும் உண்டாகின்றன.

सूक्ष्मशरीराणि सप्तदशावयवानि लिङ्ग-शरीराणि ॥ ६१ ॥

61. ஸூக்ஷ்ம சரீரங்கள் என்பவைதான் லிங்க சரீரங்கள் என்று சொல்லப்படுபவை. பதினேழு பகுதிகள் உடையவை.

अवयवास्तु ज्ञानेन्द्रियपंचकं बुद्धिमनसी कर्मेन्द्रिय-पंचकं वायुपंचकं चेति ॥ ६२ ॥

62. இப்பகுதிகளாவன : ஐந்து ஞானேந்திரியங்கள்; புத்தி ; மனது ; ஐந்து கர்மேந்திரியங்கள் ; ஐந்து ப்ராணன்கள்.

ज्ञानेन्द्रियाणि श्रोत्र-त्वक्-चक्षु-जिह्वा घ्राणाख्यानि ॥ ६३ ॥

63. ஐந்து ஞானேந்திரியங்களாவன: செவி, தோல், கண், நாக்கு, நாசி.

एतान्याकाशादीनां सात्त्विकांशेभ्यो व्यस्तेभ्यः पृथक् पृथक् क्रमेणोत्पद्यन्ते ॥ ६४ ॥

64. இவ்வைந்தும் முறையே தனித்தனியாக ஆகாயம் முதலியவற்றின் ஸத்வ குணத்திலிருந்து பெறப்படுகின்றன.

बुद्धिर्नाम निश्चयात्मिकान्तःकरणवृत्तिः ॥ ६५ ॥

65. அந்தக்கரணம் என்ற அறிவுக் கருவியின் ஒரு மாறுதலே புத்தி எனப்படுகின்றது; இது நிச்சயம் செய்யும் ஆற்றல் உடையது.

मनो नाम संकल्पविकल्पात्मिकान्तःकरणवृत्तिः ॥ ६६ ॥

66. அந்தக்கரணத்தின் மற்ருெரு மாறுதலான மனது ஒரு பொருளைப் பற்றி 'இதுவோ அதுவோ' என்று சிந்திக்கும் செயலையுடையது.

अनयोरेव चित्ताहंकारयो-रन्तर्भावः ॥ ६७ ॥

67. இவற்றுள், சித்தம் புத்தியிலும், அஹங்காரம் மனத்திலும் அடங்குபவன.

अनुसन्धानात्मिकान्तःकरणवृत्तिः चित्तम् ॥ ६८ ॥

68. அந்தக்கரணத்தின் ஒரு மாறுதலாகிய சித்தம் என்பது நினைவு கூர்வதாகிய செயலுடையது.

अभिमानात्मिकान्तःकरणवृत्तिः अहंकारः ॥ ६९॥

69. 'தான்' 'தன்னுடையது' என்றுணருகின்ற அகங்காரமானது அந்தக்கரணத்தின் ஒரு மாறுதலாகும்.

एते पुनराकाशादिगत-सात्त्विकांशेभ्यो मिलितेभ्य उत्पद्यन्ते ॥ ७० ॥

70. இவையெல்லாம், ஆகாயம் முதலியவற்றின் ஸத்வமான பகுதியின் கலப்பினால் உண்டாகின்றன.

एतेषां प्रकाशात्मकत्वात् सात्त्विकांशकार्यत्वम् ॥ ७१ ॥

71. ஒளி (ப்ரகாசம்)உடையனவாக இருத்தலால், இவை ஸத்வப் பகுதிகளினின்று விளைந்ததாகச் சொல்லப்படுகின்றன.

इयं बुद्धिर्ज्ञानेन्द्रियैः सहिता विज्ञानमयकोशो भवति ॥ ७२ ॥

72. ஞானேந்திரியங்களுடன் புத்தி சேர்ந்து விஞ்ஞானமயகோசம் உண்டாகிறது.

अयं कर्तृत्व-भोक्तृत्व-सुखित्व-दुःखित्वाद्यभिमानत्वेनेह-लोक-परलोक-गामी व्यावहारिको जीव इत्युच्यते ॥ ॥ ७३ ॥

73. செயல் புரிபவனென்றும், அதன் பயனை நுகர்பவனென்றும், மகிழ்ச்சி, துன்பம் இவற்றை அனுபவிக்கிறவனென்றும் தன்னைப்பற்றி எண்ணிக்கொள்வதால், இந்த விஞ்ஞானமய கோசமானது இவ்வுலகிலும் மறு

உலகிலும் பிறப்பு முதலியன உடையவனுன ஜீவன் என்று அழைக்கப்படுகிறது.

मनस्तु ज्ञानेन्द्रियैः सहितं सन्मनोमयकोशो भवति ॥ ७४ ॥

74. மனது ஞானேந்திரியங்களுடன் சேர்ந்து மனோ மயகோசம் ஆகின்றது.

कर्मेन्द्रियाणि वाक्-पाणि-पाद-पायूपस्थाख्यानि ॥ ७५ ॥

75. (கர்மேந்திரியங்கள்) அல்லது செயற்கருவிகளாவன: பேசுகின்ற நாக்கு; கை; கால்; உடலிலிருந்து கழிவுப்பொருளை அகற்றும் கருவிகள்; இனப்பெருக்கத்திற்கான கருவி.

एतानि पुनराकाशादीनां रजोंशेभ्यो व्यस्तेभ्यः पृथक् पृथक् क्रमेणोत्पद्यन्ते ॥ ७६ ॥

76. இவை முறையே தனித்தனியாக ஆகாயம் முதலியனவற்றின் ரஜோ குணம் நிறைந்த பகுதியிலிருந்து பெறப்படுகின்றன.

वायवः प्राणापान-व्यानोदान-समानाः ॥ ७७ ॥

77. ஐந்து ப்ராணன்களாவன: ப்ராணன்; அபானன்; வியானன்; உதானன்; ஸமானன்.

प्राणो नाम प्रागगमनवान् नासाग्रस्थानवर्ती ॥७८॥

78. மேல்நோக்கிச் செல்லும் உயிர்ச்சக்தி ப்ராணன் எனப்படும்; இது நாசியின் நுனியில் உறைவது.

अपानो नामावाग्गमनवान् पाय्वादिस्थानवर्ती ॥ ७९ ॥

79. கீழ்நோக்கிச் செல்லும் உயிர்ச்சக்தி அபானன் எனப்படும்; இது கழிவுக் கருவிகளில் உறைகிறது.

व्यानो नाम विष्वग्गमनवा-नखिल-शरीरवर्ती ॥ ८० ॥

80. எல்லாப் பக்கங்களிலும் செல்லுகின்ற உயிர்ச் சக்தி வ்யானன் எனப்படும்; இது உடலெங்கும் பரவி யிருப்பது.

उदानो नाम कण्ठस्थानीय ऊर्ध्वगमनवानुत्क्रमण-वायुः ॥ ८१ ॥

81. உடலிலிருந்து உயிர் பிரிய உதவி புரிந்து, மேல் நோக்கிச் செல்லும் தன்மையுடைய உயிர்ச்சக்தி உதானன் எனப்படும். இது தொண்டையில் உறைவது.

समानो नाम शरीरमध्यगताशित-पीतान्नादि-समीकरणकरः ॥ ८२ ॥

82. உணவையும், நீரையும் ஜீரணம் (அல்லது ஸமீகரணம்) செய்யும் உயிர்ச்சக்தி ஸமானன் எனப்படும். இது உடலின் நடுவில் உறைவது.

समीकरणन्तु परिपाककरणं रस-रुधिर-शुक्र-पुरीषादि-करणमिति यावत् ॥ ८३ ॥

83. உணவை ஜீரணம் செய்து அதை ரஸமாகவும், இரத்தமாகவும், பிற உடற்பகுதிகளாகவும் மாற்றுவது ஸமீகரணம் எனப்படும்.

केचित्तु नाग-कूर्म-कृकल-देवदत्त-धनंजयाख्याः पंचान्ये वायवः सन्तीति वदन्ति ॥ ८४ ॥

84. சிலர், நாகன், கூர்மன், க்ருகலன், தேவதத்தன், தனஞ்ஜயன் என்ற ஐந்து வேறு ப்ராணன்களும் இருப்பதாகக் கூறுகிறார்கள்.

तत्र नाग उद्गिरणकरः। कूर्म उन्मीलनकरः। कृकलः क्षुत्करः। देवदत्तो जृंभणकरः। धनंजयः पोषणकरः ॥ ८५ ॥

85. அவற்றுள் வாந்தி செய்ய உதவுவது நாகன்; கண்ணிமைகளை இயக்குவது கூர்மன்; பசியைத் தூண்டுவது க்ருகலன்; கொட்டாவி வரச்செய்வது தேவதத்தன்; உடலை வளர்ப்பது தனஞ்ஜயன்.

एतेषां प्राणादिष्वन्तर्भावात् प्राणादयः पंचैवेति केचित् ॥ ८६ ॥

86. மேற்கூறிய ஐந்தும் ப்ராணன் முதலிய ஐந்தில் அடங்கிவிடுவதால், ப்ராணன்கள் மொத்தம் ஐந்தே என்று வேறு சிலர் கூறுகிறார்கள்.

एतत्प्राणादि-पंचक-माकाशादि-गत-रजोंशेभ्यो मिलितेभ्य उत्पद्यते ॥ ८७ ॥

87. ஆகாயம் முதலியவற்றின் ரஜோகுணப் பகுதிகளினுடைய கலப்பினால் இந்த ஐந்து ப்ராணன்களும் உண்டாக்கப்படுகின்றன.

इदं प्राणादिपंचकं कर्मेन्द्रियैः सहितं सत्प्राणमयकोशो भवति। अस्य क्रियात्मकत्वेन रजोंशकार्यत्वम् ॥ ८८ ॥

88. செயற்கருவிகளோடு சேர்ந்து இந்த ஐந்து ப்ராணன்களும் ப்ராணமயகோசம் எனப்படுகின்றன. இவற்றின் இயக்கச்சக்தியை முன்னிட்டு இவை ரஜோ குணப் பகுதிகளினின்று பிறந்தன என்று தெரிகின்றது.

एतेषु कोशेषु मध्ये विज्ञानमयो ज्ञानशक्तिमान् कर्तृरूपः। मनोमय इच्छाशक्तिमान् करणरूपः। प्राणमयः क्रियाशक्तिमान् कार्यरूपः। योग्यत्वादेवमेतेषां विभाग इति वर्णयन्ति। एतत्कोशत्रयं मिलितं सत्सूक्ष्मशरीर-मित्युच्यते ॥ ॥ ८९ ॥

89. இந்தக் கோசங்களுக்குள், அறிவுச் சக்தியோடு கூடிய விஞ்ஞானமயகோசம் 'செய்பவன்' (கர்த்தா) ஆகிறது; இச்சாசக்தியோடு கூடின மனோமயகோசம் செயலாற்றும் கருவியாகிறது; இயங்கும் சக்தியுடைய ப்ராணமயகோசம் காரியம் ஆகின்றது. இவற்றி னுடைய தொழில் தகுதியைக்கொண்டு இந்தப் பிரிவு கள் செய்யப்பட்டிருக்கின்றன. இம் மூன்று கோசங் களும் ஸூக்ஷ்ம சரீரம் எனப்படுகின்றன.

अत्राप्यखिलसूक्ष्मशरीर-मेकबुद्धिविषयतया वनवज्जलाशयवद्वा समष्टि-रनेकबुद्धिविषयतया वृक्षवज्जलवद्वा व्यष्टिरपि भवति ॥ ९० ॥

90. இவ்விடத்திலேயும், காடு, குளம் இவற்றைப் போல மொத்தமாக ஒன்ருகப் பார்க்குமிடத்து ஸமஷ்டி

என்றும், தனிமரங்கள், (குளத்திலுள்ள) ஜலங்கள் இவற்றைப் போல தனித்தனியாகப் பார்க்குமிடத்து வியஷ்டி என்றும், இந்த ஸூக்ஷ்ம சரீரங்களின் தொகுதி அழைக்கப்படுகிறது.

एतत् समष्ट्युपहितं चैतन्यं सूत्रात्मा हिरण्यगर्भः प्राणश्चेत्युच्यते सर्वत्रानुस्यूतत्वाज्ज्ञानेच्छाक्रिया-शक्तिमदुपहितत्वाच्च ॥ ९१ ॥

91. இந்த ஸமஷ்டியோடு கூடிய சைதன்யமானது, எல்லாவற்றிலும் உள்ளுறைவதாலும், ஞானம், இச்சை, கிரியை முதலிய சக்திகளைப் பெற்றிருப்பதாலும், ஸூத்ராத்மா என்றும், ஹிரண்யகர்ப்பர் என்றும், ப்ராணன் என்றும் சொல்லப்படுகிறது.

अस्यैषा समष्टिः स्थूलप्रपंचापेक्षया सूक्ष्मत्वात् सूक्ष्मशरीरं विज्ञानमयादि-कोशत्रयं जाग्रद्वासनामयत्वात् स्वप्नोऽत एव स्थूलप्रपंच-लयस्थानमिति चोच्यते। ॥ ९२ ॥

92. விஞ்ஞானமயகோசம் முதலிய மூன்று கோசங்களால் ஆன இந்த ஸமஷ்டியானது ஸூக்ஷ்ம சரீரம் என்று சொல்லப்படுகிறது ; ஸ்தூலமான உலகத்தைக் காட்டிலும் அது இன்னும் நுட்பமாக இருப்பதே இதற்குக் காரணம். விழிப்பு நிலையில் ஏற்பட்ட சுவடுகளால் ஆனதாக இருப்பதால் அது கனவுநிலை என்றும் சொல்லப்படுகிறது. இதே காரணத்தால், ஸ்தூல உலகம் ஒடுங்குகிற இடமாகவும் அது சொல்லப்படுகிறது.

एतद्व्यष्ट्युपहितं चैतन्यं तैजसो भवति तेजो-मयान्तःकरणोपहितत्वात् ॥ ९३ ॥

93. ஒளிமயமான அந்தக்கரணத் (அறிவுக் கருவி) தோடு சேர்ந்திருப்பதால், தனித்தனி (வ்யஷ்டி) ஸூக்ஷ்ம சரீரத்தோடு கூடிய சைதன்யம், தைஜஸன் என்று அழைக்கப்படுகிறது.

अस्यापीयं व्यष्टिः स्थूलशरीरापेक्षया सूक्ष्मत्वादिति हेतोरेव सूक्ष्मशरीरं विज्ञानमयादि-कोशत्रयं जाग्रद्वास-नामयत्वात् स्वप्नोऽत एव स्थूलशरीर-लयस्थानमिति चोच्यते ॥ ९४ ॥

94. விஞ்ஞானமயகோசம் முதலிய மூன்று கோசங்களால் ஆன இந்த வ்யஷ்டியானது, ஸூக்ஷ்ம சரீரம் என்று சொல்லப்படுகிறது; ஸ்தூலமான உடம்பைக் காட்டிலும் இன்னும் நுட்பமாக அது இருப்பதே இதற்குக் காரணம். விழிப்பு நிலையில் ஏற்பட்ட சுவடுகளால் ஆனதாக இருப்பதால் அது கனவுநிலை என்றும் சொல்லப்படுகிறது. இதே காரணத்தால், ஸ்தூல உடல் ஒடுங்கும் இடமாகவும் அது சொல்லப்படுகிறது.

एतौ सूत्रात्म-तैजसौ तदानीं मनोवृत्तिभिः सूक्ष्म-विषयाननुभवतः "प्रविविक्तभुक्तैजसः" (मा. उप. ४) इत्यादिश्रुतेः ॥ ९५ ॥

95. அந்நேரத்தில் (கனவில்) ஸூத்ராத்மாவும், தைஜஸனும் மனத்தின் செயல்களால், நுட்பமான கருப்பொருள்களை நுகர்கின்றனர். "தைஜஸன் கருப்பொருள்களை நுகர்பவன்" (மா. உ ப. 4) என்று உபநிஷத்தும் சொல்லுகின்றது.

अत्रापि समष्टिव्यष्ट्यो-स्तदुपहित-सूत्रात्म-तैजसयो-र्वनवृक्षव-त्तदवच्छिन्नाकाशवच्च जलाशय-जलवत् तद्गत-प्रतिबिम्बाकाशवच्चाभेदः ॥ ९६ ॥

96. இவ்விடத்திலும், காட்டையும் அதிலுள்ள மரங்களையும் போல, அல்லது குளத்தையும் அதிலுள்ள நீரையும் போல, ஸமஷ்டியும் வியஷ்டியும் வெவ்வேறன்று; காட்டினாலும் அதிலுள்ள மரங்களினாலும் வரையறுக்கப்பட்ட ஆகாயம் போலவும், குளத்திலும் அதிலுள்ள ஜலத்திலும் பிரதிபலிக்கும் ஆகாயம் போலவும், ஸூத்ராத்மாவும் தைஜஸனும் வெவ்வேறன்று.

एवं सूक्ष्मशरीरोत्पत्तिः ॥ ९७ ॥

97. இவ்விதம் ஸூக்ஷ்ம சரீரம் பிறக்கிறது.

स्थूलभूतानि तु पञ्चीकृतानि ॥ ९८ ॥

### பஞ்சீகரணம்

98. ஆனால், பருப்பொருள்கள் ஐந்து வகையான கலப்பினால் உண்டானவை.

पंचीकरणं त्वकाशादिपंचस्वेकैकं द्विधा समं विभज्य तेषु दशसु भागेषु प्राथमिकान् पंच-भागान् प्रत्येकं चतुर्धा समं विभज्य तेषां चतुर्णां भागानां स्वस्वद्वितीयार्धभाग-परित्यागेन भागान्तरेषु योजनम् ॥ ९९ ॥

99. இந்தக் கலவை ஏற்படும் முறை பின்வருமாறு: ஆகாயம் முதலிய ஐந்து மூலப்பொருள்களில் ஒவ்வொன்றும் இரண்டு சமமான பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன. இவ்விதம் உண்டான பத்து பகுதிகளில், ஒவ்

வொரு மூலப்பொருளின் முதல் பகுதிகளான ஐந்து பகுதிகள் ஒவ்வொன்றும் நான்கு சமபகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன. இதன்பின், ஒவ்வொரு மூலப்பொருளின் ஒரு பாதியை அப்படியே வைத்துக்கொண்டு, மற்றப் பாதியோடு மற்ற நான்கு மூலப்பொருள்களினுடைய நான்கு பகுதிகளினின்று ஒரு பகுதி சேர்க்கப்படுகின்றது.

तदुक्तं—

"द्विधा विधाय चैकैकं चतुर्धा प्रथमं पुनः।
स्वस्वेतर-द्वितीयांशै-र्योजनात् पंच पंच ते" इति ॥१००॥

100. அதுவே சொல்லப்பட்டிருக்கிறது: "ஒவ்வொரு மூலப்பொருளையும் சரிபாதியாகப் பிரித்து, ஒவ்வொரு மூலப்பொருளினுடைய முதற்பாதியை பின்னும் நான்கு சமபாகங்களாகப் பிரித்து, பிறகு ஒவ்வொரு மூலப் பொருளின் இரண்டாவது பாதியோடு மற்ற மூலப் பொருள்களினின்று பெற்ற நான்கு பாகங்களில் ஒன்றைக் கூட்டிவிட்டால், ஒவ்வொரு மூலப்பொருளும் ஒன்றில் ஐந்து (பாகங்களுடையதாக) ஆகிறது." (பஞ்சதசீ 1.27)

अस्याप्रामाण्यं नाशङ्कनीयं। त्रिवृत्करण - श्रुतेः पंचीकरणस्यापि उपलक्षणत्वात् ॥१०१॥

101. இந்தக் கலப்பு முறைக்கு ஆதாரம் கிடையாது என்று கூறுவதற்கில்லை; ஏனெனில், உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிற த்ரிவ்ருத்கரணம் (என்ற முக்கலவை) பஞ்சீகரணம் (என்ற ஐங்கலவை)யையும் குறிப்பாக உணர்த்துகிறது.

पंचानां पंचात्मकत्वे समानेऽपि तेषु च "वैशेष्यात्तु तद्वादस्तद्वादः" (ब्र. सू. २.४.२२) इति न्यायेनाकाशादि-व्यपदेशः सम्भवति ॥ १०२ ॥

102. இந்த ஐந்து மூலப்பொருள்களில் ஒவ்வொன்றும் ஐந்து மூலப்பொருள்களின் கலவையை உடையதாக இருப்பதால் ஒன்றெனக் கருதலாமாஞலும், "குறிப்பிட்ட மூலப்பொருளின் பகுதி மிகுதியாக இருத்தலால் இப்பெயர்" (ப்ரஹ்மஸூத்ரம் 2.4.22) என்றபடி அவை ஆகாயம் முதலிய வெவ்வேறு பெயர்களை உடையதாக இருக்கின்றன.

तदानीमाकाशे शब्दो-भिव्यज्यते, वायौ शब्द-स्पर्शावग्नौ शब्द-स्पर्श-रूपाण्यप्सु शब्द-स्पर्श-रूप-रसाः, पृथिव्यां शब्द-स्पर्श-रूप-रस-गन्धाश्च ॥ १०३ ॥

103. அந்நேரத்தில் (கலவையின்போது) ஆகாயம் ஒலியை வெளிப்படுத்துகிறது; காற்று ஒலியையும் ஊறையும்; தீ, ஒலி, ஊறு, உருவம் இவற்றையும்; நீர், ஒலி, ஊறு, உருவம், சுவை இவற்றையும்; மண், ஒலி, ஊறு, உருவம், சுவை, நாற்றம் இவற்றையும் முறையே வெளிப்படுத்துகின்றன.

एतेभ्यः पंचीकृतेभ्यो भूतेभ्यो भू-र्भुवःसुव-र्मह-र्जनस्तपः-सत्य-मित्येतन्नामकाना-मुपर्युपरि विद्यमानानामतल-वितल-सुतल-रसातल-तलातल-महातल-पातालनामकाना-मधोऽधोविद्यमानानां लोकानां ब्रह्माण्डस्य तदन्तर्गत-चतुर्विध-स्थूल-शरीराणां तदुचिताना-मन्नपानादीनां चोत्पत्ति-र्भवति ॥ १०४ ॥

104. இந்தக் கலவை செய்யப்பட்ட பஞ்சபூதங்களிலிருந்து, ஒன்றின்மேல் ஒன்றுக ஏழு மேல் உலகங்கள் படைக்கப்படுகின்றன. அவையாவன: பூ, புவ, ஸுவ, மஹ, ஜன, தப, ஸத்ய லோகங்கள். ஒன்றின் கீழ் ஒன்ருக ஏழு கீழ் உலகங்கள் படைக்கப்படுகின்றன. அவையாவன: அதல, விதல, ஸுதல, ரஸாதல, தலாதல, மஹாதல, பாதால லோகங்கள்; ப்ரஹ்மாண்டமும், அதனுள்ளடங்கிய நான்கு வகையான ஸ்தூல சரீரங்களும் அவற்றிற்கேற்ற உணவு, நீர் இவற்றுடன் படைக்கப்படுகின்றன.

चतुर्विध-शरीराणि तु जरायुजाण्डज-स्वेदजोद्भिज्जाख्यानि ॥ १०५ ॥

105. நான்கு வகையான (ஸ்தூல) சரீரங்களாவன: (1) கருப்பையிலிருந்து பிறப்பவை (2) முட்டையிலிருந்து பிறப்பவை (3) வியர்வையிலிருந்து பிறப்பவை (4) மண்ணிலிருந்து பிறப்பவை.

जरायुजानि जरायुभ्यो जातानि मनुष्य-पश्वादीनि ॥१०६॥

106. மனிதர்கள், பிராணிகள் எல்லாம் கருப்பையிலிருந்து பிறப்பவை.

अण्डजान्यण्डेभ्यो जातानि पक्षि-पन्नगादीनि ॥ १०७ ॥

107. பறவை, பாம்பு இவையெல்லாம் முட்டையிலிருந்து பிறப்பவை.

स्वेदजानि स्वेदेभ्यो जातानि यूका-मशकादीनि ॥ १०८ ॥

108. பேன், கொசு முதலியன ஈரத்திலிருந்து பிறப்பவை.

उद्भिज्जानि भूमिमुद्भिद्य जातानि लतावृक्षादीनि ॥ १०९ ॥

109. மரம், செடி கொடிகள் எல்லாம் மண்ணிலிருந்து பிறப்பவை.

अत्रापि चतुर्विध-सकल-स्थूल-शरीर-मेकानेकबुद्धि-विषयतया वनवज्जलाशयवद्वा समष्टि-र्वृक्षवज्जलवद्वा व्यष्टिरपि भवति ॥ ११० ॥

110. இங்கேயும், காடு, ஏரி என்பனவற்றைப்போல, நான்கு வகையான ஸ்தூல சரீரங்களும் ஒரு தொகுதி யாகப் பேசப்படலாம்; அல்லது, தனி மரங்கள், ஏரியி லுள்ள ஜலம் இவற்றைப்போல, தனித்தனியாகவும் பேசப்படலாம்.

एतत्समष्ट्युपहितं चैतन्यं वैश्वानरो विराडित्युच्यते सर्वनराभिमानित्वा-द्विविधं राजमानत्वाच्च ॥ १११ ॥

111. எல்லா சரீரங்களுடனும் ஒன்றுபட்டிருப்ப தாலும், பலவகையாகத் தோற்றமளிப்பதாலும், ஸ்தூல சரீரங்களின் தொகுதி (ஸமஷ்டி)யோடு கூடிய சைதன்ய மானது, வைச்வானரன் என்றும் விராட் என்றும் முறையே சொல்லப்படுகிறது.

अस्यैषा समष्टिः स्थूलशरीर-मन्नविकारत्वादन्न-मयकोशः स्थूलभोगायतनत्वाच्च स्थूलशरीरं जाग्रदिति च व्यपदिश्यते ॥ ११२ ॥

112. உணவின் ஒரு மாற்றமாக இருப்பதால் விராட் டினுடைய இந்த ஸ்தூல சரீரத் தொகுதியானது

அன்னமயகோசம் எனப்படுகிறது. பருப்பொருள் களை நுகர்வதற்கு இருப்பிடமானதால் இது விழிப்பு நிலை (ஜாக்ரத்) யில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

एतद्व्यष्ट्युपहितं चैतन्यं विश्व इत्युच्यते सूक्ष्मशरी-राभिमान-मपरित्यज्य स्थूलशरीरादिप्रविष्टत्वात् ॥ ११३ ॥

113. ஸூக்ஷ்ம சரீரத்திலுள்ள பிடிப்பை விடாமலே ஸ்தூல சரீரத்தில் உறைவதால், தனித்தனி (வியஷ்டி) ஸ்தூல சரீரத்துடன் கூடிய சைதன்யமானது விச்வன் எனப்படுகிறது.

अस्याप्येषा व्यष्टिः स्थूलशरीर-मन्नविकारत्वादेव हेतो-रन्नमयकोशो जाग्रदिति चोच्यते ॥ ११४ ॥

114. உணவின் ஒரு மாற்றமாக இருத்தலால், விச்வனுடைய தனி (வ்யஷ்டி) ஸ்தூல சரீரமானது அன்னமய கோசம் எனப்படுகிறது. விழிப்பு நிலையி லிருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

तदानीमेतौ विश्ववैश्वानरौ दिग्वातार्क-वरुणा-श्विभिः क्रमान्नियन्त्रितेन श्रोत्रादीन्द्रिय-पंचकेन क्रमाच्छ-ब्द-स्पर्श-रूप-रस-गन्धान् ; अग्नीन्द्रोपेन्द्र-यम-प्रजा-पतिभिः क्रमान्नियन्त्रितेन वागादीन्द्रिय-पंचकेन क्रमा-द्वचनादानगमन-विसर्गानन्दान् ; चन्द्र-चतुर्मुख-शंक-राच्युतैः क्रमान्नियन्त्रितेन मनो-बुद्ध्यहंकार-चित्ताख्ये-नान्तरिन्द्रियचतुष्केण क्रमात्संकल्प - निश्चयाहंकार्य - चैत्तांश्च सर्वानेतान् स्थूलविषयाननुभवतः "जागरित-स्थानोबहिः प्रज्ञः" (मा. उप. ३) इत्यादिश्रुतेः ॥ ११५ ॥

115. இந்த விழிப்பு நிலேயில், விச்வனும் வைச்வானர னும், முறையே திக்கு, வாயு, சூரியன், வருணன், இரண்டு அச்வினிகள் என்ற இவர்களின் ஆட்சிக் குட்பட்ட காது முதலிய ஐந்து புலன்களின் வழியாக முறையே ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் இவைகளே நுகர்கின்றனர். முறையே அக்கினி, இந்த்ரன், உபேந்த் ரன், யமன், பிரஜாபதி இவர்களின் ஆட்சிக்குட்பட்ட நா முதலிய ஐந்து விணேக் கருவிகளால், முறையே, பேச்சு, பெற்றுக்கொள்ளுதல், செல்லுதல், வெளியேற்றல், இன்பமெய்துதல் (என்ற செயல்களேச் செய்கின்றனர்.) முறையே சந்திரன், பிரம்மா, சிவன், விஷ்ணு இவர் களின் ஆட்சிக்குட்பட்ட, மனது, புத்தி, அஹங்காரம், சித்தம் என்ற நான்கு உட்புலன்களால், ஐயப்பாடு, உறுதி, தான் என்னும் உணர்வு, நிணேவு என்பவைகளே உடையவர்களாக இருக்கின்றனர். "எவனுக்கு விழிப்பு நிலே இடமாக இருக்கிறதோ, எவன் புற உலகை உணர் கின்ருனோ" (மா. உப. 3) என்பது போன்ற உபநிஷத் வாக்கியங்களும் இருக்கின்றன.

अत्राप्यनयोः स्थूलव्यष्टिसमष्ट्यो-स्तदुपहित-विश्व-वैश्वानरयोश्च वनवृक्षव - त्तदवच्छिन्नाकाशवच्च जला-शयजलव-त्तद्गत-प्रतिबिम्बाकाशवच्च पूर्ववदभेदः ॥ ११६॥

116. இங்கேயும், காட்டையும் (அதிலிருக்கும்) மரங் களேயும்போல, ஏரியையும் (அதிலிருக்கும்) தண்ணீரை யும் போல, தொகுதியான ஸ்தூல சரீரங்களும் தனித்தனி ஸ்தூல சரீரங்களும், வெவ்வேறல்ல; இந்த சரீரங்களோடு கூடிய விச்வ, வைச்வானரர்களும், தனி மரங்கள், காடு இவற்ருல் வரையறுக்கப்பட்ட ஆகாயத்தைப்போலவும்,

ஏரி, ஜலத்துளிகள் இவற்றில் பிரதிபலிக்கும் ஆகாயம் போலவும், ஒன்ருகவே இருக்கிருர்கள்.

एवं पंचीकृत-पंचभूतेभ्यः स्थूलप्रपंचोत्पत्तिः ॥ ११७ ॥

117. இவ்வாறு ஐந்துவிதமாகக் கலவை செய்யப்பட்ட ஐந்து மூலப் பருப்பொருள்களிலிருந்து இந்த ஸ்தூல உலகமானது தோன்றியிருக்கிறது.

एतेषां स्थूल-सूक्ष्म-कारण-प्रपंचानामपि समष्टिरेको महान् प्रपंचो भवति यथावान्तरवनानां समष्टिरेकं महद्वनं भवति यथा वावान्तरजलाशयानां समष्टिरेको महान् जलाशयः ॥ ११८ ॥

118. சிறு சிறு காடுகள் சேர்ந்து பெரிய காடாவது போல, சிறு சிறு ஏரிகள் சேர்ந்து பெரியதொரு ஏரியாவது போல, ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண உலகங்கள் சேர்ந்து ஒரு பெரிய உலகமாகின்றது.

एतदुपहितं वैश्वानरादीश्वरपर्यन्तं चैतन्यमप्यवान्तर-वनावच्छिन्नाकाशवदवान्तर-जलाशयगत-प्रतिबिम्बाकाशवच्चैकमेव ॥ ११९ ॥

119. பல சிறிய காடுகளால் வரையறுக்கப்பட்ட ஆகாயமானது எப்படி அவற்ருலான பெரிய காட்டினுல் வரையறுக்கப்பட்ட ஆகாயத்தினின்றும் வேருன தில்லையோ, பல சிறிய ஏரிகளில் பிரதிபலிக்கும் சூரியன் எப்படி அவற்ருலான பெரிய ஏரியில் பிரதிபலிக்கும் சூரியனைவிட வேருனதில்லையோ, அவ்வாறே வைச்வான

ரனிலிருந்து தொடங்கி ஈச்வரன் ஈருக இதனேடு (இந்த பெரிய உலகத்தோடு) கூடிய சைதன்யம் ஒன்றேயாம்.

आभ्यां महाप्रपंच-तदुपहित-चैतन्याभ्यां तप्तायः-पिण्डवदविविक्तं सदनुपहितं चैतन्यं "सर्वं खल्विदं ब्रह्म" (छा. उप. ३.१४.१.) इति (महा) वाक्यस्य वाच्यं भवति विविक्तं सल्लक्ष्यमपि भवति ॥ १२० ॥

120. பழுக்கக்காய்ச்சிய இரும்புக்குண்டைப்போல பெரிய இவ்வுலகத்தினின்றும், அதனேடு கூடிய சைதன் யத்தினின்றும் பிரித்தறியப்படாமல், இயற்கையில் ஒரு விதமான சேர்க்கை (உபாதி) யுமில்லாத சைதன்யமே, "இதெல்லாம் உண்மையில் ப்ரஹ்மமேயாகும்" (சா. உப. 3. 14. 1.) என்ற வேத மந்திரத்திற்கு நேரடி யான பொருளாகின்றது. அவற்றிலிருந்து பிரித்தறியப் படும்பொழுது அந்த மந்திரத்தின் உட்பொருளா கின்றது.

एवं वस्तुन्यवस्त्वारोपोऽध्यारोपः सामान्येन प्रदर्शितः ॥ १२१ ॥

121. இம்முறையில், (இருக்கின்ற) வஸ்துவில் இல்லாத தொன்றை ஏற்றிவைக்கும் செயலான அத்யாரோபம் என்பது பொதுவாக விளக்கப்பட்டது.

॥ तृतीयोऽध्यायः ॥

इदानीं प्रत्यगात्मनीदमिद-मयमय-मारोपयतीति विशेषत उच्यते ॥ १२२ ॥

## அத்தியாயம் 3

## ஜீவனும் அத்யாரோபமும்

### சார்வாகமதம்

122. இனி, "நான் இது" "நான் இது" என்று எவ்வாறு உள்ளுறையும் ஆத்மாவில் (மனிதர்கள்) அத்யாரோபத்தைச் செய்கிறுர்கள் என்பது விரிவாகச் சொல்லப்படுகிறது.

अतिप्राकृतस्तु "आत्मा वै जायते पुत्रः" इत्यादि-श्रुतेः स्वस्मिन्निव पुत्रेऽपि प्रेमदर्शनात् पुत्रे पुष्टे नष्टे चाहमेव पुष्टो नष्टश्चेत्या-द्यनुभवाच्च पुत्र आत्मेति वदति ॥ १२३ ॥

123. "உண்மையில் (ஆத்மாவே) தானே (தன்னிடத்தில்) பிள்ளையாகப் பிறக்கிருன்" என்று வேதவாக்கியம் இருப்பதாலும், ஒருவன் தன் மகனை தன்னுடைய ஆத்மாவைப்போலவே நேசிப்பதாலும், தன் மகன் சீராகவோ அல்லது தாழ்ந்தோ இருப்பதைப் பொறுத்துத் தன்னைச் சீருடையவனுகவோ தாழ்ந்தவனுகவோ ஒருவன் கருதுவதாலும், மிகவும் அறியாதவனுன ஒருவன் தன் மகனைத் தன் ஆத்மா என்று சொல்லுகிருன்.

चार्वाकस्तु "स वा एष पुरुषो अन्नरसमयः" (तै. उप. २.१.१.) इत्यादिश्रुतेः प्रदीप्तगृहात् स्वपुत्रं परित्यज्यापि स्वस्य निर्गम-दर्शनात् स्थूलोऽहं कृशोऽह-मित्या-द्यनुभवाच्च स्थूल-शरीर-मात्मेति वदति ॥ १२४ ॥

124. "இந்த மனிதனேவெனில் அன்னரஸமய மானவன்" (தை. உப. 2. 1. 1.) என்று சுருதியிருப்ப தாலும், தீப்பிடித்துக்கொண்ட வீட்டிலிருந்து தன் னுடைய மகனையும் விட்டு விட்டு ஒருவன் வெளியே ஓடு வது கண்கூடாதலாலும், 'நான் பருத்தவன்' 'நான் மெலிந்தவன்' என்று அநுபவமிருப்பதாலும், ஸ்தூல சரீரமே ஆத்மா என்று சார்வாகர்களில் ஒரு சார்பினன் கூறுவான்.

अपरश्चार्वाकः "ते ह प्राणाः प्रजापतिं पितरमे-त्योचुः" (छा. उप. ५.१.७ ) इत्यादिश्रुते-रिन्द्रियाणा-मभावे शरीरचलनाभावात् काणोऽहं बधिरोऽहं इत्याद्यनु-भवाच्चेन्द्रियाण्यात्मेति वदति ॥ १२५ ॥

125. "அந்த புலன்கள் தந்தையான பிரம்மதேவரை அணுகி உரைத்தன" (சா. உப. 5. 1. 7.) என்ற சுருதி யிருப்பதாலும், புலன்கள் இல்லாவிடில் உடலின் இயக்கம் இருக்காதாதலாலும், "நான் ஒரு கண்ணில் குருடன்", 'நான் செவிடன்' என்ற அநுபவமிருப்பதாலும், புலன்களே ஆத்மா என்று சார்வாகர்களிலேயே மற்றொரு சார்பினன் கூறுவான்.

अपरश्चार्वाकः "अन्योऽन्तर आत्मा प्राणमयः" (तै. उप. २.२.१.) इत्यादिश्रुतेः प्राणाभाव इन्द्रियादि-

चलनायोगा - दहमशनायावानहं पिपासावानित्यादि अनुभवाच्च प्राण आत्मेति वदति ॥ १२६ ॥

126. "அதனின்றும் வேருக, அதனிலும் உள்ளுறை கின்ற ஆத்மா ப்ராணமயன்" (தை. உப. 2. 2. 1.) என்று உபநிஷத் சொல்லுவதாலும், பிராணன் இல்லாதபொழுது புலன்கள் செயற்படுவதில்லை யாதலாலும், 'நான் பசித் திருக்கிறேன்', 'நான் தாகமுடையவனுக இருக்கிறேன்' என்று அநுபவமிருப்பதாலும், ப்ராணனையே ஆத்மா என்று சார்வாகர்களிலேயே மற்ருெரு சார்பினன் கூறுவான்.

अन्यस्तु चार्वाकः "अन्योऽन्तर आत्मा मनोमयः" (तै. उप. २.३.१.) इत्यादिश्रुते-र्मनसि सुप्ते प्राणादे-रभावादहं संकल्पवानहं विकल्पवानित्याद्यनुभवाच्च मन आत्मेति वदति ॥ १२७ ॥

127. "இதனுள்ளும் உறைகின்ற இதனின்றும் வேருன ஆத்மா மனேமயன்" (தை. உப. 2. 3. 1.) என்று உபநிஷத் சொல்லுவதாலும், மனது தூக்கத்தில் ஆழ்ந்து விடும்பொழுது ப்ராணன் முதலியன ஒடுங்கிவிடுவ தாலும், "நான் நிச்சயிக்கிறேன்", "நான் ஐயுறு கிறேன்" என்பது போன்ற அநுபவமிருப்பதாலும், சார்வாகர்களிலேயே இன்னுமொரு பிரிவினன் மன தையே ஆத்மா என்று கூறுவான்.

बौद्धस्तु "अन्योऽन्तर आत्मा विज्ञानमयः" (तै. उप. २.४.१.) इत्यादिश्रुतेः कर्तुरभावे करणस्य शक्त्यभावादहं कर्ताहं भोक्ता इत्याद्यनुभवाच्च बुद्धिरात्मेति वदति ॥ १२८ ॥

## பௌத்த மதம்

128. இதற்கு மாருக "இதனின்றும் வேருக, இதனுள்ளும் உறைகின்ற ஆத்மா விஞ்ஞானமயன்" (தை. உப. 2. 4. 1.) என்று உபநிஷத் சொல்லுவதாலும், செய்பவன் இல்லாதபொழுது, கருவிகள் பயனில்லாது ஒழிவதாலும், "நான் செய்பவன்", "நான் பலனை நுகர்பவன்" என்பது போன்ற அநுபவம் இருப்பதாலும் புத்தியே ஆத்மா என்று பௌத்தன் சொல்லுகிருன்.

प्रभाकरतार्किकौ तु "अन्योऽन्तर आत्मानन्दमय:" (तै उप. २.५.१) इत्यादिश्रुते-र्बुद्ध्यादीनामज्ञाने लयदर्शना-दहमज्ञो ऽहमज्ञानीत्याद्यनुभवाच्चाज्ञानमात्मेति वदतः ॥ १२९ ॥

## மீமாம்ஸக மதம்

129. "இதனின்றும் வேருக, இதனுள்ளும் உறைகின்ற ஆத்மா ஆனந்தமயன்" (தை. உப. 2. 5. 1.) என்று உபநிஷத் சொல்லுவதாலும், நல்ல தூக்கத்தில் புத்தி முதலியன அஞ்ஞானத்தில் ஒடுங்கி விடுவதாலும், "நான் தெரியாதவன்", "நான் அறிவில்லாதவன்" என்பது போன்ற அநுபவங்கள் காணப்படுவதாலும், ப்ராபாகர மீமாம்ஸகர்களும், தார்க்கிகர்களும் அஞ்ஞானமே ஆத்மா என்று கூறுகிருர்கள்.

भाट्टस्तु "प्रज्ञानघन एवानन्दमय:" (मा. उप. ५) इत्यादिश्रुतेः सुषुप्तौ प्रकाशाप्रकाशसद्भावात् मामहं न जानामीत्याद्यनुभवाच्चाज्ञानोपहितं चैतन्यमात्मेति वदति ॥ ॥ १३० ॥

130. "உணர்வால் நிறைந்தது; ஆனந்த மய மானது" (மா. உப. 5.) என்று உபநிஷத் இருப்ப தாலும், தூக்கத்திலே உணர்வும் உணர்வின்மையும் கலந்து காணப்படுவதாலும், "நான் என்னைத் தெரிந்து கொள்ளவில்லை" என்பது போன்ற அநுபவம் இருப்ப தாலும், அஞ்ஞானத்தோடு கூடிய உணர்வே ஆத்மா என்று பாட்ட மீமாம்ஸகர்கள் கூறுகிறார்கள்.

अपरः बौद्धः "असदेवेदमग्र आसीत्" (छा. उप. ६.१.१) इत्यादि श्रुतेः सुषुप्तौ सर्वाभावादहं सुषुप्तौ नासमित्युत्थितस्य स्वाभावपरामर्श-विषयानुभवाच्च शून्यमात्मेति वदति ॥ १३१ ॥

### சூன்ய வாதம்

131. "முதன் முதலில் இது அஸத்தாகவே இருந் தது" (சா. உப. 6. 2. 1.) என்று உபநிஷத் சொல்லுவ தாலும், தூக்கத்திலே ஒன்றும் தெரியவில்லையாதலாலும், "தூக்கத்தில் நான் இல்லை" என்று தூக்கத்திலிருந்து எழுந்த ஒருவன் தன்னையே இல்லையென்று சொல்லிக் கொள்ளுகிற ஓர் அநுபவம் இருப்பதாலும் சூன்யமே ஆத்மா என்று பௌத்தர்களிலேயே மற்றொரு சார்பினன் கூறுவான்.

एतेषां पुत्रादीना-मनात्मत्व-मुच्यते ॥ ॥ १३२ ॥

### ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம்

132. மகன் முதலிய இவையெல்லாம் ஆத்மா அல்ல என்று இப்பொழுது சொல்லப்படுகிறது.

एतै-रतिप्राकृतादि-वादिभि- रुक्तेषु श्रुति - युक्त्य-नुभवाभासेषु पूर्वपूर्वोक्त - श्रुतियुक्त्यनुभवाभासाना-मुत्तरोत्तर-श्रुतियुक्तयनुभवाभासै-रात्मत्व - बाध-दर्शनात् पुत्रादीना-मनात्मत्वं स्पष्टमेव ॥ १३३ ॥

133. இவ்வாறு மிகுந்த அறியாமையில் மூழ்கி இருக்கின்றவர்கள் முதற்கொண்டு, பலரால் சொல்லப்பட்ட, உபநிஷத் வாக்கியங்களை (தவருகச்) சொல்லுதல், (தவருன) தர்க்கம், அநுபவத்திலிருந்து (தவருன) மேற்கோள்கள் ஆகிய இவற்றிலெல்லாம், முன்னவரால் சொல்லப்பட்ட ச்ருதி, யுக்தி, அநுபவம் ஆகியவை பின் வந்தவர்களால் சொல்லப்பட்ட சுருதி, யுக்தி, அநுபவம் ஆகியவற்ருல் மறுக்கப்படுவதால், மகன் முதலியன ஆத்மா அல்ல என்பது தெளிவு.

किंच प्रत्यग स्थूलोऽचक्षु-रप्राणोऽमना अकर्ता चैतन्यं चिन्मात्रं सदित्यादि - प्रबलश्रुति-विरोधा-दस्य पुत्रादि-शून्यपर्यन्तस्य जडस्य चैतन्यभास्यत्वेन घटादि-वदनित्यत्वा-दहं ब्रह्मेति विद्वदनुभव-प्राबल्याच्च तच्छ्रुति-युक्तयनुभवाभासानां बाधितत्वादपि पुत्रादिशून्यपर्यन्त-मखिल-मनात्मैव ॥ १३४ ॥

134. மேலும், "நான் ப்ரஹ்மம்" என்ற மெய்யுணர்ந்தோரின் அநுபவம் ப்ரபலமாக இருப்பதாலும், மகன் தொடங்கி சூன்யம் ஈருக உள்ள ஜடவஸ்துக்கள் (ஆத்ம) சைதன்யத்திஞல் பொலிவதால், பானை முதலியவற்றைப் போல நிலையாதவையாதலாலும், "ஆத்மா பருப் பொருளல்ல, அதற்குக் கண்கள் கிடையா, ப்ராணன் இல்லை, மனது இல்லை, அது கர்த்தாவன்று, அது சைதன்யம்,

கேவலம் உணர்வுரு; அது என்றும் உளது'' என்பது முதலிய பிரபல உபநிஷத் வாக்கியங்களால் மறுக்கப் படுவதாலும், (மேலே சொன்ன) அந்தந்த சுருதி, யுக்தி, அநுபவம் இவற்றின் தவருன கையாடல்கள் கண்டிக்கப் படுவதால், மகன் முதல் சூன்யம் ஈருக எதுவும் ஆத்மா அன்று.

अतस्तत्तद्भासकं नित्य-शुद्ध-बुद्ध-मुक्त-सत्य-स्वभावं प्रत्यक्-चैतन्यमेवात्मवस्त्विति वेदान्तविद्वदनुभवः ॥१३५॥

135. ஆகையால், என்றுமுள தன்மை, தூய்மை, உணர்வு, சுதந்திரம், உண்மை இவற்றை இயற்கையாக உடையதும், (மகன் முதல் சூன்யம் ஈருக உள்ள) அவற்றை யெல்லாம் பொலியச் செய்வதுமான உள்ளுறை சைதன்யமே ஆத்மாவாகும். இதுவே மெய்யுணர்ந் தோரின் அநுபவமாகும்.

एवमध्यारोपः ॥ १३६ ॥

136. இதுவரை அத்யாரோபம் (சொல்லப்பட்டது).

## ॥ चतुर्थोऽध्यायः ॥

अपवादो नाम रज्जुविवर्तस्य सर्पस्य रज्जुमात्रत्ववद्वस्तु-विवर्तस्यावस्तुनोऽज्ञानादेः प्रपञ्चस्य वस्तुमात्रत्वम् ॥ १३७ ॥

## அத்தியாயம் 4

## அபவாதம் அல்லது அத்யாரோப நிவிருத்தி

137. கயிற்றின் தோற்றமான பாம்பு எவ்வாறு கயிற்றைத் தவிர வேறில்லையோ, அதுபோலவே உள்ள

பொருளின் தோற்றமான உண்மையல்லாத அஞ்ஞானம் முதலிய உலகமெல்லாம் அந்த உள்ள பொருளைத் தவிர வேறில்லை. இதுவே அபவாதம் எனப்படும்.

तदुक्तम् —
" सतत्त्वतोऽन्यथाप्रथा विकार इत्युदीरितः ।
अतत्त्वतोऽन्यथाप्रथा विवर्त इत्युदीरितः ॥" इति ॥१३८॥

138. இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது : "ஒரு பொருள் உண்மையிலேயே இன்னொரு பொருளாக மாறுவது விகாரம் என்று சொல்லப்படுகின்றது. மாறுவதாகக் தோற்றம் மட்டும் காண்பிப்பது விவர்த்தம் எனப்படுகிறது."

तथा हि एतद्भोगायतनं चतुर्विध-सकल-स्थूलशरीर-जातं भोग्यरूपान्नपानादिक-मेत-दायतन-भूत-भूरादि-चतुर्दश-भुवनान्येत-दायतनभूतं ब्रह्माण्डं चैतत्सर्व-मेतेषां कारणरूपं पंचीकृत-भूतमात्रं भवति ॥ १३९ ॥

139. விளக்கமாகச் சொன்னால் : பொருட்களை நுகர்வதற்கான இடங்களான நான்கு ஸ்தூல சரீர வகைகளும்; உணவு, குடித்தல் முதலிய நுகர்தற்குரிய பொருள்கள் பலவும், இவற்றைத் தன்னுள் கொண்ட பூலோகம் முதலிய பதினன்கு உலகங்களும், இவற்றைத் தன்னுள் கொண்ட பிரம்மாண்டம் என்ற இவை யாவும், ஐந்து வகையாகக் கலவை செய்யப்பட்ட காரண நிலையில் இருக்கின்ற ஐந்து மூலப் பொருள்களாகவே ஆகின்றன.

एतानि शब्दादिविषय-सहितानि पंचीकृतानि भूतानि सूक्ष्मशरीरजातं चैतत्सर्वमेतेषां कारणरूपापंचीकृत-भूतमात्रं भवति ॥ १४० ॥

140. ஐந்துவகையாகக் கலவை செய்யப்பட்ட இவ்வைந்து மூலப்பொருள்களும், ஒலி முதலிய பொருள்கள், ஸூக்ஷ்ம சரீரங்கள் இவை யெல்லாமும் ஐந்து வகையாகக் கலவை செய்யப்படாத, காரண நிலையில் இருக்கின்ற, மூலப் பொருள்களாகவே ஆகின்றன.

एतानि सत्त्वादिगुण-सहितान्यपंचीकृतान्युत्पत्ति-व्युत्क्रमेणैतत् कारणभूताज्ञानोपहित-चैतन्यमात्रं भवति । ॥ १४१ ॥

141. இந்த கலவை செய்யப்படாத ஐந்து மூலப் பொருள்களும், அவற்றின் ஸத்வம் முதலிய குணங்களுடன், படைப்பு முறைக்கு எதிர் முறையாக, அஞ்ஞானத்தோடு கூடின சைதன்யம் என்ற காரணத்தில் ஒடுங்குகின்றன.

एत-दज्ञान-मज्ञानोपहितं चैतन्यं चेश्वरादिक-मेतदाधार-भूतानुपहित-चैतन्यरूपं तुरीयं ब्रह्ममात्रं भवति ॥ १४२ ॥

142. இவ்வஞ்ஞானமும், அஞ்ஞானத்தோடு கூடிய சைதன்யமாகிய ஈச்வரன் முதலியவர்களும், அஞ்ஞானக் கலப்பில்லாததும் எல்லாவற்றையும் கடந்து நிற்கின்றதும், எல்லாவற்றிற்கும் அடிப்படையானதுமான ப்ரம்ஹமாகவே ஆகின்றனர்.

आभ्या-मध्यारोपापवादाभ्यां तत्त्वंपदार्थ-शोधन-मपि सिद्धं भवति ॥ १४३ ॥

143. அத்யாரோபம், அபவாதம் என்ற இம்முறையால், 'தத்' 'த்வம்' (அது, நீ) என்ற சொற்களின் பொருள் நன்கு ஆராயப்பட்டதாகிறது.

तथा हि—अज्ञानादि-समष्टि-रेतदुपहितं सर्वज्ञत्वादि-विशिष्टं चैतन्यमेतदनुपहितं चैतत्त्रयं तप्तायः-पिण्डव-देकत्वे-नावभासमानं तत्पदवाच्यार्थो भवति ॥ १४४ ॥

144. அதாவது அஞ்ஞானத்தின் தொகுதியும், இவ்வஞ்ஞானத்தோடு கூடியதும், முழுதும் உணர்தல் என்ற தன்மையோடு கூடியதுமான சைதன்யமும், இவ்வஞ்ஞானக் கலப்பில்லாத சைதன்யமும் ஆகிய இம் மூன்றும்; பழுக்கக் காய்ச்சிய இரும்புக் குண்டைப் போன்று ஒன்று போலத் தோன்றும்பொழுது, 'தத்' (அது) என்ற சொல்லின் வெளிப்படையான முதற் பொருளாகின்றன.

एतदुपाद्युपहिताधार-भूत-मनुपहितं चैतन्यं तत्पद-लक्ष्यार्थो भवति ॥ १४५ ॥

145. (அஞ்ஞானம் போன்ற) உபாதிகளுக்கும், அவற்றோடு கூடிய ஈச்வரனுக்கும் ஆதாரமாக இருக்கின்ற (அவ்வுபாதிக்) கலப்பில்லாத சைதன்யமே, தத் (அது) என்ற சொல்லின் உட்கருத்தாகும்.

अज्ञानादि - व्यष्टिरेत - दुपहिताल्पज्ञत्वादि - विशिष्ट-चैतन्य-मेतदनुपहितं चैतत्त्रयं तप्तायःपिण्डवदेकत्वे-नावभासमानं त्वं-पद-वाच्यार्थो भवति ॥ १४६ ॥

146. தனித்தனி (ஜீவர்களிடத்து இருக்கும்) அஞ்ஞானம், இஃதோடு கூடிய, சிற்றறிவுள்ள சைதன்யம், (இவை ஒன்றிேடும்) சேராத (சுத்த)சைதன்யம், இவை மூன்றும், பழுக்கக்காய்ச்சப்பட்ட இரும்புத் துண்டைப் போல ஒன்ருகத் தோன்றும்பொழுது, த்வம் (நீ) என்ற சொல்லின் நேர்க்கருத்தாகின்றன.

एतदुपाध्युपहिताधार - भूत-मनुपहितं प्रत्यगानन्दं तुरीयं चैतन्यं त्वं-पद-लक्ष्यार्थो भवति ॥ १४७ ॥

147. இவ்வுபாதிகளோடு சேராததும், உள்ளுறைகின்ற ஆனந்தமானதும், எல்லாவற்றையும் கடந்ததும், உபாதிகளுடன் கூடிய எல்லாவற்றிற்கும் ஆதாரமுமான சைதன்யமே, த்வம் (நீ) என்ற சொல்லின் உட்கருத்தாகின்றது.

अथ महावाक्यार्थो वर्ण्यते । इदं तत्त्वमसिवाक्यं सम्बन्धत्रयेणाखण्डार्थ-बोधकं भवति ॥ १४८ ॥

## 'தத்-த்வம் அஸி' என்ற மஹா வாக்கியத்தின் பொருள்

148. இனி மஹா வாக்கியத்தின் பொருள் விளக்கப்படுகிறது. தத் த்வம்-அஸி (அதாக நீ இருக்கிருய்) என்ற இந்த மஹா வாக்யமானது, மூன்று வகையான தொடர்பினுல் வேற்றுமையில்லாத ஒரே பொருளைக் குறிப்பதாக இருக்கிறது.

सम्बन्धत्रयं नाम पदयोः सामानाधिकरण्यं, पदार्थयो-र्विशेष्य-विशेषण-भावः, प्रत्यगात्मलक्षणयोर्लक्ष्य-लक्षणभावश्चेति ॥ १४९ ॥

149. மூன்று விதமான தொடர்புகளாவன : (1) சொற்களின் ஸாமாநாதிகரண்யம், (2) சொற்களினுடைய பொருளின் விசேஷண-விசேஷ்ய-பாவம், (3) இரு சொற்கள் ஒன்றையே குறிக்கும் லக்ஷ்ய-லக்ஷண-பாவம்.

तदुक्तम्—
" सामानाधिकरण्यं च विशेषण-विशेष्यता ।
लक्ष्यलक्षण-सम्बन्धः पदार्थप्रत्यगात्मनाम् "इति ॥ ॥१५०॥
(नैष्कर्म्यसिद्धिः ३.३.)

150. இதுவே கூறப்பட்டிருக்கிறது : (1) "ஸாமாநாதி கரண்யம், (2) விசேஷண - விசேஷ்யதா, (3) சொற்கள் உள்ளுறை ஆத்மாவைக் குறிக்கும் வகையால் லக்ஷ்ய-லக்ஷணத் தொடர்பு (எனத் தொடர்புகள் மூன்று)" என்று. (நைஷ்கர்ம்ய-ஸித்தி : 3.3).

सामानाधिकरण्य-सम्बन्ध-स्तावद्यथा सोऽयं देवदत्त इत्यस्मिन्वाक्ये तत्कालविशिष्ट-देवदत्तवाचक-सशब्दस्यै-तत्कालविशिष्ट-देवदत्तवाचकायं-शब्दस्य चैकस्मिन् पिण्डे तात्पर्यसम्बन्धः। तथा च तत्त्वमसीति वाक्येऽपि परोक्षत्वादि-विशिष्टचैतन्यवाचक-तत्पदस्यापरोक्षत्वादि-विशिष्ट-चैतन्यवाचक-त्वम्पदस्य चैकस्मिंश्चैतन्ये तात्पर्य-सम्बन्धः ॥ १५१ ॥

151. ஒரே பொருளைக் குறித்த இரு சொற்களுக்கிடையே உள்ள ஸம்பந்தமானது ஸாமாநாதிகரண்யம் எனப்படும். உதாரணமாக, "இவன் தான் அந்தத் தேவதத்தன்" என்ற வாக்கியத்தில், கடந்த காலத்தில் பார்த்த தேவதத்தனைப் பொருளாகவுடைய 'அந்த' என்ற சொல்லும், தற்பொழுது பார்க்கப்படும் தேவதத்

தனைப் பொருளாகவுடைய 'இவன்தான்' என்ற சொல்லும், (தேவதத்தன் என்ற) ஒரே பொருளைக் குறிக்கின்றன. இதுபோலவே, "நீ அதுவே" என்ற வாக்கியத்திலும், பரோக்ஷமான சைதன்யத்தைப் பொருளாகவுடைய 'அது' என்ற சொல்லும், அபரோக்ஷமான சைதன்யத்தைப் பொருளாகவுடைய 'நீ' என்ற சொல்லும் ப்ரஹ்ம சைதன்யம் ஒன்றையே குறிக்கின்றன.

विशेषण-विशेष्य-भाव-सम्बन्धस्तु यथा तत्रैव वाक्ये सशब्दार्थ-तत्कालविशिष्ट-देवदत्तस्यायं - शब्दार्थैतत्काल-विशिष्ट-देवदत्तस्य चान्योन्य-भेदव्यावर्तकतया विशेषण-विशेष्य-भावः। तथात्रापि वाक्ये तत्पदार्थ-परोक्षत्वादि-विशिष्टचैतन्यस्य त्वंपदार्थापरोक्षत्वादि-विशिष्ट-चैतन्यस्य चान्योन्य-भेदव्यावर्तकतया विशेषण-विशेष्यभावः॥१५२॥

152. விசேஷண-விசேஷ்ய ஸம்பந்தமானது யாதெனில்: ('இவன்தான் அந்தத் தேவதத்தன்') என்ற அதே வாக்கியத்தில், கடந்த காலத்தில் பார்க்கப்பட்ட தேவதத்தன் 'அந்த' என்ற சொல்லின் பொருளாகிறான். தற்பொழுது பார்க்கப்படுகிற தேவதத்தன் 'இவன்தான்' என்ற சொல்லின் பொருளாகிறான். இவ்விரு சொற்களும் ஒன்றுக்கொன்று முரணாக இருப்பினும், ஒரே பொருளைக் குறிப்பதால் விசேஷண-விசேஷ்ய பாவம் உண்டாகிறது. இது போலவே, (தத்-த்வமஸி) 'நீ அதுவே' என்ற வாக்கியத்தில், பரோக்ஷமான சைதன்யம் 'அது' என்ற சொல்லினால் குறிக்கப்படுகின்றது. அபரோக்ஷமான சைதன்யம் 'நீ' என்ற சொல்லினால் குறிக்கப்படுகின்றது. இவை ஒன்றுக்கொன்று முரணாகவிருப்பினும், ஒரே சைதன்யத்தைக் குறிப்பதன் மூலம் விசேஷண-விசேஷ்ய-பாவம் ஏற்படுகிறது.

लक्ष्यलक्षण-सम्बन्धस्तु यथा तत्रैव सशब्दायं-शब्दयो-स्तदर्थयोर्वा विरुद्ध-तत्कालैतत्कालविशिष्टत्वपरि-त्यागेना-विरुद्ध-देवदत्तेन सह लक्ष्यलक्षण-भावः तथात्रापि वाक्ये तत्त्वं-पदयो-स्तदर्थयोर्वा विरुद्धपरोक्ष-त्वादि-विशिष्टत्व-परित्यागेनाविरुद्धचैतन्येन सह लक्ष्य-लक्षण-भावः ॥ १५३ ॥

153. லக்ஷ்ய-லக்ஷண ஸம்பந்தமாவது யாதெனில்: ('இவன்தான் அந்தத் தேவதத்தன்' என்ற அதே வாக்கியத்தில்) 'இவன்' என்ற சொல்லிலும், 'அந்த' என்ற சொல்லிலும், அல்லது இவற்றின் கருத்துக்களிலும் காணப்படும் ஒன்றுக்கொன்று முரணுன கடந்த காலம், தற்காலம் என்ற சேர்க்கைகளை விட்டுவிட்டால் ஒரே தேவதத்தனை இவ்விரண்டு சொற்களும் குறிக்கும் வகையால் லக்ஷ்ய-லக்ஷணத் தன்மையானது உண்டாகிறது. இதுபோலவே, (நீ அதுவே) என்ற இந்த வாக்கியத்திலும், 'அது' என்ற சொல்லிலும், 'நீ' என்ற சொல்லிலும், அல்லது இவற்றின் கருத்திலும் காணப்படுகின்ற பரோக்ஷம், அபரோக்ஷம் என்ற முரணுன சேர்க்கைகளை நீக்கிவிட்டால், இவை ஒரே சைதன்யத்தைக் குறிக்கும் வகையில் லக்ஷ்ய-லக்ஷணத் தன்மை உண்டாகிறது.

इयमेव भागत्यागलक्षणेत्युच्यते ॥ १५४ ॥

154. இதுவே பாகத்யாகலக்ஷணம் என்றும் சொல்லப் படுகிறது.

अस्मिन् वाक्ये नील-मुत्पल-मिति वाक्यवद्वाक्यार्थो न संगच्छते ॥ १५५ ॥

155. இந்த (நீ அதுவே) என்ற வாக்கியத்தில், 'நீலத் தாமரை' என்ற வாக்கியத்தைப் போல, நேரடியான பொருள் பொருந்துவதில்லை.

तत्र तु नीलपदार्थ-नीलगुणस्योत्पल-पदार्थोत्पल-द्रव्यस्य च शौक्लय-पटादि-भेद-व्यावर्तकतयान्योन्य-विशेषण-विशेष्यरूप-संसर्गस्यान्यतर-विशिष्टस्यान्यतरस्य तदैक्यस्य वा वाक्यार्थत्वांगीकारे प्रमाणान्तर-विरोधा-भावात्तद्वाक्यार्थः संगच्छते ॥ १५६ ॥

156. ('நீலத் தாமரை') என்ற (சொற்றொடரில்), 'நீல' என்ற சொல்லிற்கு 'நீல நிறம்' என்பது பொருள்; 'தாமரை' என்ற சொல்லிற்கு, தாமரை என்ற பூ பொருளாகிறது. இவை முறையே, வெண்மை முதலிய மற்ற நிறங்களிலிருந்தும், துணி முதலிய மற்றப் பொருள்களிலிருந்தும் பிரித்தறியப்படுகின்றன. இம் முறையில், இவை அடைமொழியாகவும் (விசேஷணம்) அதற்குரிய பொருளாகவும் (விசேஷ்யம்) சேர்ந்திருக்கின்றன. பொருளும் அதன் குணமும் இவ்வாறு ஒருமைப்படுத்திப் பேசப்படுவதே (நீலத் தாமரை) என்ற சொற்றொடரின் கருத்து என்று ஒப்புக் கொள்ளுவதில் வேறு எந்தப் ப்ரமாணத்திற்கும் விரோதம் இல்லையாதலின், (இச் சொற்றொடரிலுள்ள) சொற்களின் நேரடியான கருத்தையே எடுத்துக்கொள்ளலாம்.

अत्र तु तत्पदार्थ-परोक्षत्वादि-विशिष्टचैतन्यस्य त्वं-पदार्थापरोक्षत्वादि-विशिष्टचैतन्यस्य चान्योन्यभेद-व्यावर्तकतया विशेषण-विशेष्य-भाव-संसर्गस्यान्यतर-

विशिष्टस्यान्यतरस्य तदैक्यस्य वा वाक्यार्थत्वांगीकारे प्रत्यक्षादि-प्रमाण-विरोधाद्वाक्यार्थो न संगच्छते ॥ १५७॥

157. ஆனல் ("நீயும் அதுவே" என்ற) இந்த வாக்கியத்தில், 'அது' என்ற சொல்லிற்கு பரோக்ஷத்வம் முதலான வற்றோடு சேர்ந்த சைதன்யம் பொருளாகின்றது; 'நீ' என்ற சொல்லிற்கு அபரோக்ஷத்வம் முதலியவற்றோடு கூடின சைதன்யம் பொருளாகின்றது. இவ்விரண்டு சைதன்யங்களும், ஒன்றுக்கொன்று உள்ள வேற்றுமை நீங்கிவிட்ட நிலையில், குணம், குணத்தை உடையது என்ற விசேஷண-விசேஷ்ய உறவை அடைகின்றன என்றோ ஒன்றிற்கு மற்றொன்று குணமாக ஆகின்றது என்றோ அல்லது, இரண்டும் ஒருமையை அடைகின்றன என்றோ ("நீயும் அதுவே") என்ற வாக்கியத்திற்குப் பொருள் கொள்ளமுடியாது. அப்படிக் கொள்வது ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களுக்கு முரணுகுமாதலால் பொருந்தாது.

तदुक्तं—

"संसर्गो वा विशिष्टो वा वाक्यार्थो नात्र सम्मतः।
अखण्डैकरसत्वेन वाक्यार्थो विदुषां मतः" इति
(पञ्चदशी ७.७५) ॥ १५८॥

158. அதனுலேயே (இவ்வாறு) கூறப்பட்டிருக்கிறது: (இந்த) இரண்டு ('அது' என்ற சொல், 'நீ' என்ற சொல்) சொற்களின் சேர்க்கையோ, அல்லது ஒன்றிற்கு இன்னென்று அடைமொழியாகவிருக்கும் பான்மையோ (தத்-த்வமஸி) என்ற வாக்கியத்துக்குச் சரியான பொருளாகாது. அறிஞர்களின் கருத்துப்படி இரண்டில்லாத

ஒரே பரம்பொருளைத்தான் இவ்வாக்கியம் கருத்தாகக் கொண்டிருக்கிறது.

अत्र गंगायां घोषः प्रतिवसतीतिवाक्यवज्ज-
हल्लक्षणापि न संगच्छते ॥ १५९ ॥

159. 'இந்த இடையர் கிராமம் கங்கையில் இருக் கிறது' என்ற வாக்கியத்தைப்போல, இங்கு (நீ அதுவே) என்ற வாக்கியத்தில் ஜஹல்லக்ஷணை பொருந்தாது.

तत्र तु गंगाघोषयो-राधाराधेय-भावलक्षणस्य
वाक्यार्थस्याशेषतो विरुद्धत्वाद्वाक्यार्थ-मशेषतः परि-
त्यज्य तत्सम्बन्धि - तीरलक्षणाया युक्तत्वाज्जहल्लक्षणा
संगच्छते ॥ १६० ॥

160. மேற்சொன்ன வாக்கியத்தில், 'கங்கை' என்ற சொல்லையும், 'கிராமம்' என்ற சொல்லையும் ஒன்றில் மற்ருென்று இருக்கிறது என்ற பொருளில் அப்படியே எடுத்துக் கொள்ளுவோமாளுல், அநுபவத்திற்கு முரணுக இருக்குமாதலால், இந்த வாக்கியத்தின் பொருளை முழு வதும் விட்டுவிட்டு, லக்ஷணையினுல் (உட்கருத்தினுல்) (கங்கை என்ற) அந்தச் சொல்லோடு தொடர்புடைய 'கரை' என்ற பொருத்தமான கருத்தை எடுத்துக் கொள்ளவேண்டும். இங்கே ஜஹல்-லக்ஷணை பொருந்து கிறது.

अत्र तु परोक्षापरोक्ष - चैतन्यैकत्वलक्षणस्य
वाक्यार्थस्य भागमात्रे विरोधाद्भागान्तरमपि परित्यज्या-
न्यलक्षणाया अयुक्तत्वाज्जहल्लक्षणा न संगच्छते ॥१६१॥

161. (நீ அதுவே) என்ற இந்த வாக்கியத்திலோ வெனில், பரோக்ஷ, அபரோக்ஷ சைதன்யங்களின் ஒருமையைக் குறிப்பதனுல், (பரோக்ஷம் அபரோக்ஷம் என்ற) ஒரு பகுதியில் தான் அநு பவ விரோதம் (முரண்) காணப்படுகிறது. அதனுலே (விரோதமில்லாத) மற்றப் பகுதியையும் விட்டுவிட்டுப் பொருள் தேடுவது சரியன்று தலின், இங்கு ஜஹல்லக்ஷணே பொருந்தாது.

न च गंगापदं स्वार्थपरित्यागेन तीरपदार्थं यथा लक्षयति तथा तत्पदं त्वं-पदं वा स्वार्थ-परित्यागेन त्वं-पदार्थं तत्पदार्थं वा लक्षयत्वतः कुतो जहल्लक्षणा न संगच्छत इति वाच्यम् ॥ १६२ ॥

162. "எப்படி ('கங்கையில் கிராமம்' என்ற வாக்கியத்தில்) 'கங்கை' என்ற சொல்லானது தன்னுடைய நேரான பொருளேவிட்டு 'கரை' என்பதைக் குறிக்குமோ, அவ்வாறே ('தத்வமஸி' என்ற வாக்கியத்தில்) 'தத்' என்ற சொல்லோ, அல்லது 'த்வம்' என்ற சொல்லோ தன் நேரடியான பொருளே விட்டு லக்ஷணேயினுல் 'தத்' என்பதின் உட்பொருளேயும் 'த்வம்' என்ற சொல்லின் உட்பொருளேயும் உணர்த்துவதாக எடுத்துக் கொண்டால் அதை ஜஹல்லக்ஷணே என்று ஏன் சொல்லக்கூடாது?" என்று கேட்கவும் முடியாது.

तत्र तीरपदाश्रवणेन तदर्थप्रतीतौ लक्षणया तत्प्रतीत्यपेक्षायामपि तत्त्वंपदयोः श्रूयमाणत्वेन तदर्थप्रतीतौ लक्षणया पुनरन्यतरपदेनान्यतर-पदार्थ-प्रतीत्यपेक्षा-भावात् ॥ १६३ ॥

163. ("கங்கையில் கிராமம்" என்ற) வாக்கியத்தில் 'கரை' என்ற சொல் காணப்படாததால், அந்தப் பொருளை லக்ஷணையால் பெறவேண்டியிருக்கிறது. ஆனால், (தத்வமஸி) என்ற வாக்கியத்தில், 'தத்' 'த்வம்' என்ற சொற்கள் காணப்படுகின்றன. அவற்றின் பொருளும் வெளிப்படை. ஆகவே, அவைகளுள் ஒன்றின் மூலம் மற்றொன்றின் பொருளை உணர்த்துதற்கு லக்ஷணை தேவையில்லை.

अत्र शोणो धावतीति-वाक्यवदजहल्लक्षणापि न सम्भवति ॥ १६४ ॥

164. மேலும், "சிவப்பு ஓடுகிறது" என்ற வாக்கியத்தைப்போல (தத்வமஸி) வாக்கியத்தில் அஜஹல்லக்ஷணையும் பொருந்தாது.

तत्र शोणगुण-गमनलक्षणस्य वाक्यार्थस्य विरुद्ध-त्वात्तदपरित्यागेन तदाश्रयाश्वादि-लक्षणया तद्विरोध-परिहार-सम्भवा-दजहल्लक्षणा सम्भवति ॥ १६५ ॥

165. "சிவப்பு ஓடுகிறது" என்பதில் சொல்லுக்குச் சொல் பொருள் கொள்வது அபத்தமாகும். இந்தக் குறையை நீக்குவதற்கு, 'சிவப்பு' என்ற சொல்லினுடைய நேரான பொருளை விட்டுவிடாமல், அந்த நிறமுள்ள குதிரையைக் குறிப்பதாக எடுத்துக்கொள்ள வேண்டும். ஆகையால் இங்கு அஜஹல்லக்ஷணை பொருந்துகிறது.

अत्र तु परोक्षत्वापरोक्षत्वादि-विशिष्टचैतन्यैकत्वस्य वाक्यार्थस्य विरुद्धत्वात्तत्परित्यागेन तत्सम्बन्धिनो यस्य

कस्यचिदर्थस्य लक्षितत्वेपि तद्विरोध-परिहारासम्भवा-द जहल्लक्षणा न सम्भवत्येव ॥ १६६ ॥

166. ஆனால், (தத்-த்வ-மஸி) என்ற இந்த வாக்கியத்திலோ, பரோக்ஷமாகவும் அபரோக்ஷமாகவும் ஒரே சைதன்யம் இருப்பதாக நேரான பொருள் கொள்வது முரணாகும். இந்த (பரோக்ஷ, அபரோக்ஷ) அர்த்தங்களை விட்டுவிடாமல், அவைகளை ஒட்டிய வேறு ஒரு கருத்து குறிக்கப்படுவதாக எடுத்துக்கொண்டாலும், முரண்பாடு நீங்காது. ஆகவே, இங்கு அஜஹல்லக்ஷணையும் பொருந்தாது தான்.

न च तत्पदं त्वं-पदं वा स्वार्थविरुद्धांश-परित्यागेनांशान्तरसहितं त्वं-पदार्थं वा लक्षयत्वतः कथं प्रकारान्तरेण भागत्याग-लक्षणांगीकरणमिति वाच्यम् ॥ १६७ ॥

167. "தத் என்ற சொல்லோ, 'த்வம்' என்ற சொல்லோ தன்னிடமுள்ள முரணான பகுதியை விலக்கி விட்டு (முரணில்லாத) தன்னுடைய மிச்சப்பொருளை மற்றதின் பொருளோடு சேர்த்துக்கொள்ளலாம். ஆகவே வேறு முறையான பாகத்யாகலக்ஷணைக்கு இடமேயில்லை" என்று கூறுவதும் தகாது.

एकेन पदेन स्वर्थांशपदार्थान्तरोभयलक्षणाया असम्भवात्पदान्तरेण तदर्थप्रतीतौ लक्षणया पुनस्तत्प्रतीत्यपेक्षाभावाच्च ॥ १६८ ॥

168. ஏனெனில், (1) ஒரே சொல் தன்னுடைய பொருளில் ஒரு பகுதியையும், மற்றச்சொல்லின் பொருளை

யும் குறிக்க முடியாது. (2) மேலும், அந்த மற்றச் சொல்லினுடைய பொருள் நேராகவே தெளிவாக இருப்ப தால், முதற்சொல்லின் இலக்ஷணையின் வழியாகத்தான் அது உணர்த்தப்பட வேண்டுமென்பதில்லை.

तस्माद्यथा सोऽयं देवदत्त इति वाक्यं तदर्थो वा तत्कालैतत्काल-विशिष्ट-देवदत्तलक्षणस्य वाक्यार्थस्यांशे विरोधाद्विरुद्ध-तत्कालैतत्काल-विशिष्टांशं परित्यज्या-विरुद्धं देवदत्तांशमात्रं लक्षयति तथा तत्त्वमसीति-वाक्यं तदर्थो वा परोक्षत्वा-परोक्षत्वादि-विशिष्टचैतन्यैकत्व-लक्षणस्य वाक्यार्थस्यांशे विरोधाद्विरुद्ध-परोक्षत्वा-परोक्षत्वविशिष्टांशं परित्यज्याविरुद्ध-मखण्ड-चैतन्यमात्रं लक्षयतीति ॥ १६९ ॥

169. ஆகவே, எவ்வாறு, "அவனே இந்த தேவ தத்தன்" என்ற வாக்கியத்தில், அல்லது அதனுடைய கருத்தில், "கடந்த காலத்தில் பார்த்த தேவதத்தன்," "தற்பொழுது பார்த்த தேவதத்தன்" என்ற கால வேறுபாட்டினால் தோன்றும் முரண்பாடு இருப்பதால் இக்காலத்தைக் குறிக்கும் முரண்பாடான பகுதியை விட்டு விட்டு, முரண்பாடே இல்லாத (இரண்டு காலங்களிலும் ஒரே மனிதனை) தேவதத்தனை மட்டும் லக்ஷணையினால் பெறுகிறோமோ, அதுபோலவே, 'தத்வமஸி' என்ற வாக்கியத்தில் அல்லது அதனுடைய கருத்தில், பரோக்ஷம், அபரோக்ஷம் என்ற இரண்டையும் அடை மொழியாக உடைய சைதன்யம் என்பதிலுள்ள முரண் பாடு காரணமாக, பரோக்ஷம், அபரோக்ஷம் இவற்றைக் குறிக்கும் முரண்பாடான பகுதியை விட்டுவிட்டு, 'தத்' 'த்வம்' என்ற இரண்டுக்கும் பொதுவான அகண்டமான

சைதன்ய ஸ்வரூபம் மட்டில் லக்ஷணையால் பெறப் படுகிறது.

अथाधुनाहं ब्रह्मास्मि (बृ. उप. १.४.१०) इत्यनुभववाक्यार्थो वर्ण्यते ॥ १७० ॥

**‘அஹம்-ப்ரஹ்ம-அஸ்மி’ என்பதன் பொருள்**

170. இப்பொழுது அஹம் ப்ரஹ்ம அஸ்மி (நான் பரம்பொருளாக இருக்கிறேன்) என்ற (பிருஹதாரண்யக உபநிஷத்தின்கண் உள்ள I. 4.10) அநுபவ வாக்கியத்தின் பொருள் உரைக்கப்படுகின்றது.

एवमाचार्येणाध्यारोपापवाद-पुरःसरं तत्त्वं-पदार्थौ शोधयित्वा वाक्येनाखण्डार्थेऽवबोधितेऽधिकारिणोऽहं नित्य - शुद्ध-बुद्ध - मुक्त-स्वभाव - परमानन्दानन्ताद्वयं ब्रह्मास्मीत्यखण्डाकाराकारिता चित्तवृत्ति-रुदेति ॥ १७१ ॥

171. தவருக ஏற்றிவைக்கப்பட்டிருக்கிற பொய்மைகளை அகற்றுவதன் மூலம் ‘தத்’ என்ற சொல்லிற்கும் ‘த்வம்’ என்ற சொல்லிற்கும் உள்ள கருத்துக்களை இவ்வாறு ஆசாரியன் விளக்கி, ‘தத் த்வம் அஸி’ என்ற வாக்கியத்தின் அகண்டமான (அத்விதீயமான) பொருளை தகுதிபெற்ற மாணவனுக்குக் கொடுத்ததும், அம்மாணவனுடைய அறிவிலே “நான் நித்யமான, சுத்தமான, அறிவுமயமான, எப்பொழுதும் ஸ்வதந்திரமான, உண்மையான, இயற்கையிலேயே பேரின்பமான, எல்லை, வரம்புகளற்ற, (அதைத் தவிர) இரண்டாவதில்லாத ப்ரஹ்மமாகவே இருக்கிறேன்” என்ற அகண்டாகாரமான மனோவிருத்தி உண்டாகிறது.

सा तु चित्प्रतिबिम्बसहिता सती प्रत्यगभिन्नमज्ञातं परं ब्रह्म विषयीकृत्य तद्गताज्ञानमेव बाधते तदा पटकारण-तन्तुदाहे पटदाहवदखिल-कारणेऽज्ञाने बाधिते सति तत्कार्यस्याखिलस्य बाधितत्वात् तदन्तर्भूताखण्डाकाराकारिता चित्तवृत्तिरपि बाधिता भवति ॥ १७२ ॥

172. இந்த மனோ விருத்தியானது, தூய பரம்பொருட் சைதன்யத்தினுடைய பிரதிபிம்பத்தோடு கூடியதாகி, அறிய முடியாத ஆனால் தன் ஆத்மாவோடு ஒன்றான ப்ரஹ்மத்தையே தனது பொருளாக (விஷயமாக)க் கொண்டு, (அதைத் தெரிந்து கொள்ள முடியாமல் மறைக்கிற) அஞ்ஞானத்தை நீக்குகிறது. பின்னர், நூல்களெல்லாம் எரிக்கப்பட்டபொழுது அவைகளால் ஆக்கப்பட்ட ஆடையும் எரிந்து போவதுபோல, மூல காரணமான அஞ்ஞானம் அழிந்துபடும்பொழுது, அதன் விளைவுகளான எல்லா அறியாமைகளும் நீங்கிவிடுகின்றன. இதனால், அகண்டாகாரமான மனோ விருத்தியும் இந்த (மூல அஞ்ஞானத்தின்) விளைவுகளில் ஒன்றானபடியாலே தானும் அழிக்கப்பட்டுவிடுகிறது.

तत्र प्रतिबिम्बितं चैतन्यमपि यथा दीपप्रभादित्यप्रभावभासना-समर्था सती तयाभिभूता भवति तथा स्वयंप्रकाशमान-प्रत्यगभिन्न-परब्रह्मावभासनानर्हतया तेनाभिभूतं सत् स्वोपाधिभूताखण्डवृत्ते-र्बाधितत्वाद्दर्पणाभावे मुखप्रतिबिम्बस्य मुखमात्रत्ववत् प्रत्यगभिन्नपरब्रह्ममात्रं भवति ॥ १७३ ॥

173. ஒரு விளக்கின் ஒளி சூரியனுடைய ஒளியை ஒளிர்விக்கும் ஆற்றல் இல்லாமல், எப்படி அச்சூரிய

னுடைய ஒளியால் மங்கிவிடுகிறதோ, அதுபோல, அந்த அகண்டாகார மனோ விருத்தியிலே நிழலாடுகிற பரம் பொருட் சைதன்யமும், தானே ஒளிர்வதும், ஆத்மாவை விட வேறல்லாததுமான ப்ரஹ்மத்தை ஒளிர்விக்கும் ஆற்றலில்லாமல், அந்த ப்ரஹ்மத்தினுடைய ஒளியினு லேயே மங்கிவிடுகிறது. சைதன்யத்தோடு சேர்ந்த (சைதன்யம் ப்ரதிபலிக்கின்ற) அகண்டாகார மனோ விருத்தி அழியும்பொழுது, ஆத்மாவைத் தவிர வேறல்லாத ப்ரஹ்மமே தனித்து எஞ்சி நிற்கிறது. எப்படி ஒரு முகம் பார்க்கும் கண்ணுடியை எடுத்துவிட்டால், அதில் நிழலாடிய ப்ரதிபிம்பம் நீங்கி உண்மையான பிம்பம் மட்டில் எஞ்சி நிற்கிறதோ அதுபோல (இங்கும் காண்க.)

एवं च सति "मनसैवानुद्रष्टव्यं" (बृ. उप. ४.४.१९) "यन्मनसा न मनुते" (के. उप. १.५) इत्यनयोः श्रुत्योरविरोधो वृत्तिव्याप्यत्वाङ्गीकारेण फलव्याप्यत्वप्रतिषेध-प्रतिपादनात् ॥ १७४ ॥

174. இது இவ்வாறிருக்க, "மனதினுல் மட்டுமே இது பார்க்கப்படவேண்டும்" என்ற (பிருஹதாரண்யக 4.4.19) சுருதிக்கும், "எது மனதினுல் அறியப் படாததோ" என்ற (கேனோபநிஷத் 1.5) சுருதிக்கும் எவ்விதமான முரணும் இல்லே. ப்ரஹ்மமானது (அகண்டா கார மனோ) விருத்திக்கு மட்டும் பொருளாகிறதேயன்றி, அது (சிதாபாஸனுல் அதாவது, விருத்தியில் பிரதிபலிக் கின்ற சைதன்யத்தால் ஏனைய சாதாரணப் பொருள்கள் பிரகாசப்படுத்தப்படுவது போன்று) ப்ரகாசப்படுத்தப் பட்டு விஷய அறிவாவது இல்லே. அது ஸ்வயம்ப்ரகாச மாக இருப்பதுதான் இதற்குக் காரணம். (சுருக்கமாகச் சொன்னுல், ப்ரஹ்மமானது விருத்தியினுல் வ்யாபிக்கப்

படுகிறதே ஒழிய, அது விருத்தியின் பலனுன சாதாரண ஞானம்போல பல-வ்யாப்யம் அன்று.)

तदुक्तं—

"फलव्याप्यत्वमेवास्य शास्त्रकृद्भि-र्निवारितम्" ॥
"ब्रह्मण्यज्ञान-नाशाय वृत्तिव्याप्ति-रपेक्षिता ॥"
इति (पंचदशी, ७.९०,९२) ॥ १७५ ॥

175. (அதனுல்தான் பஞ்சதசீயிலே (7.90,92) வித்யாரண்ய முனிவரால்) "சாஸ்திரங்களை இயற்றியவர்கள் ப்ரஹ்மம் பல-வ்யாப்யம் அன்று (சிதாபாஸனுல் பிரகாசப் படுத்தப்படவேண்டிய அவசியம் அதற்கு இல்லை) என்று சொல்லியிருக்கிருர்கள். ப்ரஹ்மத்தை மறைக்கும் அறியாமை (அஞ்ஞானம்) அழிவதற்கு மட்டுமே (அகண்டாகார மனே) விருத்தி தேவைப்படுகிறது", என்று சொல்லப்பட்டிருக்கிறது. (பஞ்சதசீ : 7.90,92).

"स्वयं-प्रकाशमानत्वान्नाभास उपयुज्यते" इति च (पंचदशी ७.९२) ॥ १७६ ॥

176. மேலும் : "ப்ரஹ்மம் ஸ்வயம்ப்ரகாசமாக இருப்பதனுலே, அதை ப்ரகாசப்படுத்த சிதாபாஸன் தேவையில்லை" என்றும் கூறப்பட்டிருக்கிறது. (பஞ் சதசீ : 7.92).

जडपदार्थाकाराकारित-चित्तवृत्ते-र्विशेषोऽस्ति ॥ १७७ ॥

177. மனேவிருத்தியானது வேறு சாதாரணப் பொருள்களை விஷயமாகக் கொள்ளும் முறை (அவற்றின் வடிவத்தை எடுத்துக்கொள்ளும் முறை) வேறு.

तथा हि। अयं घट इति घटाकाराकारित-चित्त-वृत्तिरज्ञातं घटं विषयी-कृत्य तद्गताज्ञान-निरसन-पुरस्सरं स्वगत-चिदाभासेन जडं घटमपि भासयति ॥

178. அதாவது: "இது பானை" என்று அறிவு உண்டாகும்பொழுது, மனோவிருத்தியானது பானையின் வடிவத்தை எடுத்துக் கொள்ளுகிறது; இதுவரை அறியாமலிருந்த பானையைத் தனக்கு விஷயமாகக் கொள்ளுகிறது; கொண்டு, அதை (இதுவரை) மறைத்திருந்த அஞ்ஞானத்தை நீக்குகிறது. இப்பொழுது, மனோவிருத்தியில் ப்ரதிபலிக்கும் சிதாபாஸன் (சைதன்யம்) ஜடவஸ்துவான பானையைப் புலப்படுத்துகிறது.

तदुक्तं—

"बुद्धितत्स्थ-चिदाभासौ द्वावपि व्याप्नुतो घटम् ।
तत्राज्ञानं धिया नश्येदाभासेन घटः स्फुरेत्"इति ॥
(पंचदशी. ७.९१) ॥ १७९ ॥

179. பஞ்சதசீயிலும் (7.91) "(மனோ விருத்தியாகிற) அறிவும் அதில் ப்ரதிபலிக்கின்ற சைதன்யமும் (சிதாபாஸனும்) பானையோடு தொடர்பு கொள்ளுகின்றன. இவற்றுள், அறிவு (பானையை மறைக்கிற) அஞ்ஞானத்தை நீக்குகின்றது; சைதன்யமானது அப்பானையை புலப்படுத்துகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

यथा दीपप्रभामण्डल-मन्धकारगतं घटपटादिकं विषयीकृत्य तद्गतान्धकार-निरसन-पुरस्सरं स्वप्रभया तदपि भासयतीति ॥ ॥ १८० ॥

180. எப்படி விளக்கின் ஒளியானது, இருளில் இருக்கிற பானை அல்லது துணி இவற்றை விஷயமாக்கிக் கொண்டு அவற்றை மறைக்கிற இருளை நீக்கி, தன்னுடைய ப்ரகாசத்தினால் அவற்றைப் புலப்படுத்துகின்றதோ (அவ்வாறே இங்கும் காண்க.)

## ॥ पञ्चमोऽध्यायः ॥

एवंभूत-स्वस्वरूप - चैतन्य - साक्षात्कार - पर्यन्तं श्रवण-मनन - निदिध्यासन - समाध्यनुष्ठानस्यापेक्षित-त्वात्तेऽपि प्रदर्श्यन्ते ॥ १८१ ॥

## அத்தியாயம் 5

### மெய்யுணர்விற்கு ஸாதனங்கள்

181. தன்னுடைய ஆத்மாவைவிட வேறல்லாத சைதன்யத்தை அநுபவமாக உணருகின்ற வரையில், ச்ரவண, மனன, நிதித்யாஸன, ஸமாதி முதலியவை பயிலப்பட வேண்டும். ஆகையினாலே, அவை இப்பொழுது விளக்கப்படுகின்றன.

### ச்ரவணம்

श्रवणं नाम षड्विधलिङ्गै-रशेषवेदान्ताना-मद्वितीय-वस्तुनि तात्पर्यविधारणम् ॥ १८२ ॥

182. ஆறுவகை லிங்கங்களினாலே (அறுவகைக் குறிப்புக்களினாலே) வேதாந்தத்தின் அடிப்படையான கருத்து இரண்டற்ற பரம்பொருளே என்று நிச்சயிப்பது ச்ரவணம் (கேள்வி) எனப்படும்.

लिंगानि तूपक्रमोपसंहाराभ्यासा - पूर्वता - फलार्थ-
वादोपपत्त्याख्यानि ॥ १८३ ॥

183. ஆறு லிங்கங்களாவன : (1) உபக்ரமம்—உபஸம்ஹாரம் (2) அப்யாஸம் (3) அபூர்வதா (4) பலம் (5) அர்த்தவாதம் (6) உபபத்தி.

तदुक्तं—

उपक्रमोपसंहारा-वभ्यासोऽपूर्वता फलम् ।
अर्थवादोपपत्ती च लिंगं तात्पर्यनिर्णये ॥ १८४ ॥

184. "கருத்து இது என்று நன்ருக நிச்சயம் செய்வதில், அறுவகைக் குறிப்புக்களாவன : தொடக்கமும் (உபக்ரமம்), முடிவும் (உபஸம்ஹாரம்), திரும்பத் திரும்ப வலியுறுத்தல் (அப்யாஸம்), புதியதைச் சொல்லுதல் (அபூர்வதா), நோக்கம் அல்லது பலன் (பலம்), (சொல்ல வந்ததன் கருத்தைப்) புகழ்தல் (அர்த்தவாதம்), பகுத்தறிவிற்கு ஒத்ததாக இருத்தல் (உபபத்தி)" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

प्रकरण-प्रतिपाद्यस्यार्थस्य तदाद्यन्तयो-रुपपादन-मुपक्रमोपसंहारौ । यथा छान्दोग्ये प्रकरण-प्रतिपाद्यस्या-द्वितीय-वस्तुन "एकमेवाद्वितीयं" (६.२.१.) "ऐतदा-त्म्यमिदं सर्वं" (६.८.७.) इत्यन्ते च प्रतिपादनम् ॥ १८५ ॥

185. சொல்லவந்த ஒரு குறிப்பிட்ட பகுதியின் கருத்தை அப்பகுதியின் தொடக்கத்திலும், முடிவிலும் சொல்லுவது உபக்ரம—உபஸம்ஹாரம் என்று சொல்லப்படும். உதாரணமாக, சாந்தோக்ய உபநிடதத்திலே, ஆருவது அத்தியாயத்திலே குறிப்பிட்ட பகுதி

யின் கருத்தான இரண்டற்ற பரம்பொருளானது அப் பகுதியின் தொடக்கத்தில் "ஒன்றே; அது இரண்டற் றது" (6.2.1) என்றும், முடிவில் "அதுவே எல்லாவற் றின் ஆத்மாவாகவும் இருக்கிறது" (6.8.7) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

प्रकरण-प्रतिपाद्यस्य वस्तुन-स्तन्मध्ये पौनः-पुन्येन प्रतिपादन-मभ्यासः। यथा तत्रैवाद्वितीय-वस्तुनि मध्ये तत्त्वमसीति नवकृत्वः प्रतिपादनम् ॥ १८६ ॥

186. குறிப்பிட்ட பகுதியில் சொல்லவந்த கருத்தைத் திரும்பத் திரும்ப வலியுறுத்தல் அப்யாஸம் எனப்படும். உதாரணமாக, (சாந்தோக்ய உபநிடதத்திலே) அதே பகுதியில் நீயும் அதுவே (தத் த்வம் அஸி) என்று இரண் டற்ற பரம்பொருள் ஒன்பது தடவை வலியுறுத்தப்பட்டி ருக்கிறது.

प्रकरण-प्रतिपाद्यस्याद्वितीय-वस्तुनः प्रमाणान्तरा-विषयीकरण-मपूर्वता। यथा तत्रैवाद्वितीयवस्तुनो मानान्तराविषयीकरणम् ॥ १८७ ॥

187. குறிப்பிட்ட பகுதியில் சொல்லவந்த கருத்து வேறு எவ்வகையிலும் தெரிந்துகொள்ள முடியாததாக இருப்பது அபூர்வதா எனப்படும். உதாரணமாக, (மேற் சொன்ன உபநிடதப் பகுதியில் சொல்லப்பட்ட) இரண் டற்ற பரம்பொருள் உபநிடதங்களைத் தவிர வேறு எந்த வகையிலும் தெரிந்து கொள்ள முடியாததாக இருக்கிறது.

फलं तु प्रकरण-प्रतिपाद्यस्यात्मज्ञानस्य तदनुष्ठानस्य वा तत्र तत्र श्रूयमाणं प्रयोजनम्। यथा तत्र "आचार्यवान्

पुरुषो वेद तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये " (६.१४.२) इत्यद्वितीय-वस्तुज्ञानस्य तत्प्राप्तिः प्रयोजनं श्रूयते ॥ १८८ ॥

188. ஒரு குறிப்பிட்ட பகுதியில், ஆங்காங்கு சொல்லப்படுகிற மெய்யுணர்வோ, அதனை நடத்திக் காட்டுதலோ போன்றவைகளே பலம் அல்லது பிரயோஜனம் எனப்படுகின்றன. உதாரணமாக, மேலே குறிப்பிட்ட அதே (சாந்தோக்ய உபநிடதப்) பகுதியிலே: " ஆசாரியனை அடைந்த ஒருவன் ப்ரஹ்மத்தை அறிகிறான்; உடலிலிருந்து விடுபடுமளவே அவன் பொறுத்திருக்க வேண்டும்; அதன்பின், ப்ரஹ்மத்தோடு ஒன்றிவிடுகிறான்" (6.14.2) என்று இரண்டற்ற பரம்பொருளை உணர்ந்தவன் அதை அடைவதை பிரயோஜனமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

प्रकरण-प्रतिपाद्यस्य तत्र तत्र प्रशंसन-मर्थवादः। यथा तत्रैव "उत तमादेश-मप्राक्ष्यः येनाश्रुतं श्रुतं भवत्यमतं मत-मविज्ञातं विज्ञातं" (६.१.३) इत्यद्वितीय-वस्तु-प्रशंसनम् ॥ १८९ ॥

189. குறிப்பிட்ட பகுதியில் சொல்லவந்த கருத்தைப் பல இடங்களில் உயர்த்திப் பேசுவது அர்த்தவாதம் எனப்படும். உதாரணமாக, மேற்சொன்ன அதே (சாந்தோக்யப்) பகுதியில்: " எதனால் இதுவரையில் கேட்கப்படாதது கேட்கப்பட்டதாக ஆகுமோ, இதுவரையில் சிந்திக்கப்படாதது சிந்திக்கப்பட்டதாகுமோ, அறியப்படாதது அறியப்பட்டதாகுமோ, அந்த உபதேசத்தைச் செய்யும்படி கேட்டாயா?" (6.1.3) என்ற சொற்கள் இரண்டற்ற பரம்பொருளை உயர்த்திப் பேசுகின்றன.

प्रकरण-प्रतिपाद्यार्थसाधने तत्र तत्र श्रूयमाणा युक्ति-रुपपत्तिः । यथा तत्र "यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृन्मयं विज्ञातं स्याद्वाचारम्भणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यं" (६.१.४.) इत्यादावद्वितीय-वस्तुसाधने विकारस्य वाचारम्भणमात्रत्वे युक्तिः श्रूयते ॥ १९० ॥

190. குறிப்பிட்ட பகுதியில் சொல்லவந்த கருத்துக்கு ஆதாரமாகப் பல இடங்களில் தரப்படும் யுக்திகள் உபபத்தி எனப்படும். உதாரணமாக, குறிப்பிட்ட அதே (சாந்தோக்யப்) பகுதியிலே, "பிரியமானவனே! எப்படி களிமண்ணைத் தெரிந்துகொள்வதால் களிமண்ணால் செய்யப்பட்ட அத்தனையும் தெரிந்துவிடுமோ—எந்த மாறுதலும் பேச்சின் ஒரு முயற்சியாக பெயராக மட்டிலிருப்பதால், களிமண் ஒன்றே அதில் உண்மையாக இருப்பதால்" என்ற சொற்கள் எல்லா மாறுதல்களும் வெறும் பெயர்களே என்னும் வாதத்தின் மூலம் இரண்டற்ற பரம்பொருளை ஸ்தாபிக்கவேண்டிச் சொல்லப்பட்டிருக்கின்றன.

मननं तु श्रुतस्याद्वितीय-वस्तुनो वेदान्तानुगुण-युक्तिभि-रनवरत-मनुचिन्तनम् ॥ १९१ ॥

### மனனம்

191. நல்லாசிரியனிடமிருந்து கேட்கப்பட்ட இரண்டற்ற பரம்பொருளை, வேதாந்தத்திற்கு முரணில்லாத பகுத்தறிவினால் இடையறாது நினைத்துப் பார்ப்பது மனனம் என்று அழைக்கப்படுகிறது.



विजातीय -देहादि-प्रत्ययरहिताद्वितीय-वस्तु-सजातीय-प्रत्ययप्रवाहो निदिध्यासनम् ॥ १९२ ॥

நிதித்யாஸனம்

192. (இரண்டற்ற மெய்ப்பொருளினின்று) வேறான உடல் முதலியவற்றைக் குறித்த எண்ணங்களை நீக்கி, அந்த இரண்டற்ற மெய்ப்பொருளைப்பற்றிய ஒரே எண்ணத்தின் தொடர்ந்த ஓட்டம் நிதித்யாஸனம் எனப்படுகிறது.

समाधि-र्द्विविधः सविकल्पको निर्विकल्पकश्चेति ॥ १९३ ॥

ஸமாதியின் தன்மையும் வகைகளும்

193. ஸமாதி என்பது இருவகைப்படும். (1) ஸவிகல்பக ஸமாதி (2) நிர்விகல்பக ஸமாதி.

तत्र सविकल्पको नाम ज्ञातृज्ञानादि-विकल्पलयानपेक्षयाद्वितीय - वस्तुनि तदाकाराकारितायाश्चित्त-वृत्तेरवस्थानम् ॥ १९४ ॥

194. அங்கு, அறிபவன், அறிவு முதலிய வேற்றுமைகள் மறையாமலே, இரண்டற்ற பரம்பொருளின் வடிவத்தை அடைந்த மனத்தின் ஒருநிலைப்பாடு ஸவிகல்பக ஸமாதி எனப்படுகின்றது.

तदा मृन्मय-गजादि-भानेऽपि मृद्भानवद्द्वैतभानेऽप्य-द्वैतं वस्तु भासते ॥ १९५ ॥

195. அப்பொழுது, மண்ணினால் செய்யப்பட்ட யானை தோன்றிக்கொண்டிருக்கும்பொழுதே மண்ணும்

தோன்றிக்கொண்டிருப்பதுபோல, பன்மை(யான உலகம்) தோன்றிக்கொண்டிருக்கும்பொழுது, இரண்டற்ற மெய்ப் பொருளும் உணரப்படுகிறது.

तदुक्तं—

"दृशिस्वरूपं गगनोपमं परं
सकृद्विभातं त्वजमेकमक्षरम् ।
अलेपकं सर्वगतं यदद्वयं
तदेव चाहं सततं विमुक्तमोम्" इति ॥१९६॥
—उपदेशसाहस्री (७३.१०.१)

196. "எது (ஸாக்ஷிஸ்வரூப) உணர்வே தன்மையாகக் கொண்டுள்ளதோ, ஆகாயத்தைப் போன்று வடிவில்லா ததோ, எல்லாவற்றிற்கும் மேலானதோ, எப்பொழுதும் பிரகாசிக்கிறதோ, பிறப்பில்லாததோ, இரண்டில்லாமல் ஒன்றாகவே இருக்கிறதோ, அழிவில்லாததோ, ஒன்றி னோடும் சேர்க்கையில்லாததோ, எங்கும் நிறைந்திருக் கிறதோ, இரண்டற்றதோ, எப்பொழுதும் ஸ்வதந்திரமாக நிற்கிறதோ, அதுவே நான், ஓம்!" என்று உபதேச ஸாஹஸ்ரீயிலும் (73.10.1) சொல்லப்பட்டிருக்கிறது.

निर्विकल्पकस्तु ज्ञातृज्ञानादि-विकल्पलयापेक्षया-द्वितीय-वस्तुनि तदाकाराकारितायाश्चित्तवृत्तेरतितरा-मेकीभावेनावस्थानम् ॥ १९७ ॥

197. அறிபவன், அறிவு முதலிய வேற்றுமைகள் நீங்கி இரண்டற்ற மெய்ப்பொருள்வடிவமாகவே ஆகி அதோடு நன்றாக ஒன்றிவிட்ட மனநிலைதான் நிர்விகல் பக ஸமாதி எனப்படும்.

तदा तु जलाकाराकारित-लवणानवभासेन जल-मात्रावभासव-दद्वितीय - वस्त्वाकाराकारित - चित्तवृत्त्य-नवभासेनाद्वितीयवस्तुमात्र-मवभासते ॥ १९८ ॥

198. அப்பொழுது, எப்படி (தண்ணீரில் கரைந்து) தண்ணீரின் வடிவத்தை அடைந்துவிட்ட உப்பு தென் படுவதில்லேயோ, தண்ணீர் மட்டுமே தென்படுகிறதோ, அதுபோல இரண்டற்ற மெய்ப்பொருளின் வடிவத்தை அடைந்துவிட்ட மனதின் வடிவமானது (விருத்தியானது) தென்படுவதில்லே; இரண்டற்ற மெய்ப்பொருள் மட்டுமே உணரப்படுகிறது.

ततश्चास्य सुषुप्तेश्चाभेदशङ्का न भवति । उभयत्र वृत्त्यभाने समानेऽपि तत्सद्भावासद्भावमात्रेणानयो-र्भेदोपपत्तेः ॥ १९९ ॥

## ஸமாதியும் தூக்கமும்

199. அதனுல், தூக்கமும் ஸமாதியும் ஒன்றுதானே என்ற ஐயத்திற்கு இடமில்லே. இரண்டு நிலேகளிலும் மனதினுடைய விருத்தி தென்படவில்லே என்பது பொது வானுலும், நிர்விகல்பக ஸமாதியில் அது (மனோவிருத்தி) இருக்கிறது, தூக்கத்தில் இல்லே என்பதனுல் இரண்டும் ஒன்ருகமாட்டா.

अस्याङ्गानि यम-निय-मासन-प्राणायाम-प्रत्याहार-धारणा-ध्यान-समाधयः ॥ २०० ॥

## அஷ்டாங்க யோகம்

200. நிர்விகல்பக ஸமாதிக்குப் படிகளாவன : பொதுக் கட்டுப்பாடுகள் (யமங்கள்), சிறப்பான கட்டுப்பாடுகள்

(நியமங்கள்), உடலை அமர்த்தும் நிலை (ஆஸனம்), மூச்சை ஆளுதல் (ப்ராணுயாமம்), ஆசைகளிலிருந்து விடுபடுதல் (ப்ரத்யாஹாரம்), மனத்தை ஓரிடத்தில் நிறுத்தல் (தாரணை), தியானம், மெய்யுணர்வோடு ஒன்றி விடுதல் (ஸமாதி).

तत्र "अहिंसा - सत्यास्तेय - ब्रह्मचर्या ऽपरिग्रहा यमा:" ॥ २०१ ॥

201. அங்கு **யமம்** என்பதாவது: (1) அஹிம்ஸை (கொல்லாமை) (2) ஸத்யம் (வாய்மை) (3) பிறர் பொருளை அபகரிக்காமை (அஸ்தேயம்) (4) புலனடக்கம் (ப்ரஹ்மசர்யம்) (5) பிறரிடமிருந்து பொருட்களை எதிர் பாராதிருத்தல் (அபரிக்ரஹம்) என்று ஐந்துமாகும்.

"शौच-सन्तोष - तप:-स्वाध्याय-ईश्वरप्रणिधानानि नियमा:" ॥ २०२ ॥

202. நியமமாவது: (1) தூய்மை (சௌசம்), (2) திருப்தி (சந்தோஷம்), (3) தவம் (தபஸ்), (4) வேதம் ஓதுதல் (ஸ்வாத்யாயம்) (5) இறைவனைத் தியானித்தல் (ஈச்வரப்ரணிதானம்) என்ற ஐந்துமாகும்.

करचरणादि-संस्थान-विशेष-लक्षणानि पद्म-स्वस्तिकादीन्यासनानि ॥ २०३ ॥

203. ஆஸனமாவது: பத்மாஸனம், ஸ்வஸ்திகாஸனம் என்று கைகள், கால்கள் முதலியவற்றைக் குறிப்பிட்ட நிலையில் அமர்த்திக் கொள்ளுதலாம்.

रेचक-पूरक-कुम्भक-लक्षणा: प्राणनिग्रहोपाया: प्राणायामा: ॥ २०४ ॥

204. ப்ராணாயாமமாவது: மூச்சை இழுத்தல், மூச்சை வெளிவிடுதல், மூச்சை நிறுத்திக்கொள்ளுதல் முதலிய மூச்சை அடக்கியாளும் வழிகளாம்.

इन्द्रियाणां स्वस्वविषयेभ्यः प्रत्याहरणं प्रत्याहारः ॥ २०५॥

205. ப்ரத்யாஹாரமாவது: புலன்களை அவற்றின் இயற்கையான பொருள்களினின்றும் விலக்கி மீட்பதாகும்.

अद्वितीय-वस्तुन्यन्तरिन्द्रियधारणं धारणा ॥ २०६॥

206. இரண்டற்ற மெய்ப்பொருளில் மனத்தை நிறுத்துதல் தாரணை எனப்படும்.

तत्राद्वितीय-वस्तुनि विच्छिद्य विच्छिद्यान्तरिन्द्रिय-वृत्तिप्रवाहो ध्यानम् ॥ २०७॥

207. இரண்டற்ற மெய்ப்பொருளில் இடையிடையே மனத்தைச் செலுத்தி நிறுத்தி நிலைக்கச்செய்வது த்யானம் எனப்படும்.

समाधिस्तूक्तः सविकल्पक एव ॥ २०८॥

208. ஸமாதி என்பது முன் கூறப்பட்ட ஸவிகல்பகமேயாம்.

एवमस्याङ्गिनो निर्विकल्पकस्य लयविक्षेप-कषाय-रसास्वाद-लक्षणाश्चत्वारो विघ्नाः सम्भवन्ति ॥ २०९॥

## ஸமாதிக்கு ஏற்படக்கூடிய ஊறுகளும் அவற்றின் நீக்கமும்

209. மேற்சொன்னவற்றைப் படிகளாகக் கொண்ட நிர்விகல்பக ஸமாதிக்கு, நான்கு ஊறுகள் ஏற்படக்கூடும். அவையாவன : (1) லயம் (2) விக்ஷேபம் (3) கஷாயம் (4) ரஸாஸ்வாதம்.

लय - स्तावदखण्डवस्त्वनवलंबनेन चित्तवृत्ते - र्निद्रा ॥ २१० ॥

210. அத்விதீய ப்ரஹ்மத்தினிடத்தில் ஒன்ற முடியாத நிலையில் மனது தூக்கத்தில் ஆழ்ந்து விடுவது லயம் எனப்படும்.

अखण्डवस्त्वनवलंबनेन चित्तवृत्ते-रन्यावलंबनं विक्षेप: ॥ ॥ २११ ॥

211. அத்விதீய ப்ரஹ்மத்தினிடத்தில் ஒன்ற முடியாத நிலையில், அதன்றி மற்ற ஏனைய பொருள்களை மனது பற்றி நிற்றல் விக்ஷேபம் என்று சொல்லப்படும்.

लयविक्षेपाभावेऽपि चित्तवृत्तेः रागादिवासनया स्तब्धी-भावा-दखण्डवस्त्वनवलंबनं कषायः ॥ २१२ ॥

212. லயம், விக்ஷேபம் இவையிரண்டும் இல்லாவிட்டாலும், பழைய ஆசைகளின் வாஸனையினால் அழுத்தப்பட்டு அத்விதீய ப்ரஹ்மத்தினிடத்தில் மனது ஈடுபடாத நிலை கஷாயம் எனப்படும்.

अखण्डवस्त्वनवलंबनेनापि चित्तवृत्तेः सविकल्पकानन्दास्वादनं रसास्वादः। समाध्यारम्भसमये सविकल्पकानन्दास्वादनं वा ॥ ॥ २१३ ॥

213. அத்விதீய ப்ரஹ்மத்தினிடத்தில் நிலேக்காமல், ஸவிகல்பக ஸமாதியிலுண்டாகும் ஆனந்தத்தை நுகர்ந்து அதிலேயே நின்று விடுவது ரஸாஸ்வாதம் எனப்படும். அல்லது, நிர்விகல்பக ஸமாதியில் செல்லும் பொழுதும், ஸவிகல்பக ஸமாதியிலுண்டாகும் ஆனந்தத்தைத் தொடர்ந்து நுகர்வது ரஸாஸ்வாதம் என்று சொல்லலாம்.

अनेन विघ्नचतुष्टयेन चित्तं निर्वातदीपव-दचलं सदखण्डचैतन्य-मात्रमवतिष्ठते यदा तदा निर्विकल्पकः समाधि-रित्युच्यते ॥ २१४ ॥

214. எப்பொழுது இந்த நான்கு ஊறுகளுமில்லாமல், காற்றில்லாத இடத்தில் எரியும் விளக்கைப்போல அசையாமல் மனது அத்விதீய ப்ரஹ்மத்தினிடத்தில் நிலே பெற்றிருக்கிறதோ அப்பொழுது நிர்விகல்பக ஸமாதி உண்டாவதாகச் சொல்லப்படுகிறது.

तदुक्तं—

"लये संबोधयेच्चित्तं विक्षिप्तं शमयेत् पुनः।
सकषायं विजानीयाच्छमप्राप्तं न चालयेत् ॥
नास्वादयेत्सुखं तत्र निःसङ्गः प्रज्ञया भवेत् ॥"

इति —(गौडपाद-कारिका ३.४४,४५)

"यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता"
इति च —(गीता ६.१९) ॥ २१५ ॥

215. "மனது தூக்கத்தில் ஆழ்கின்றபொழுது அதை எழுப்பிவிடு; அது (விக்ஷேபத்தினால்) அலைக்கழிக்கப் படும் பொழுது அதை அமைதியில் நிறுத்து; அது பற்றுக்களைப் பற்றும்பொழுது, விழிப்புடனிரு; அது ஒரு கட்டுப்பாட்டுக்குள் வரும்பொழுது மீண்டும் அதை அலையவிட்டு விடாதே; ஸவிகல்பக ஸமாதியினால் உண்டாகும் இன்பத்திலேயே நின்று விடாதே; விவேக புத்தியோடு பற்றில்லாமல் இரு" என்று கௌடபாத காரிகையிலே (3. 44, 45) சொல்லப்பட்டிருக்கிறது. பகவத் கீதையிலேயும் (6. 19.) "காற்றில்லாத இடத்திலே உள்ள விளக்கு எப்படி அசைவதில்லையோ, அது போலவே யோகியினுடைய உள்ளமும்" என்று கூறப் பட்டிருக்கிறது.

॥ षष्ठोऽध्यायः ॥

अथ जीवन्मुक्तलक्षण-मुच्यते ॥ २१६ ॥

## அத்தியாயம் 6

## ஜீவன் முக்தன்—ஜீவன் முக்தனின் தன்மைகள்

216. இப்பொழுது, ஜீவன் முக்தனின் தன்மை சொல்லப்படுகிறது.

जीवन्मुक्तो नाम स्वस्वरूपाखण्ड-ब्रह्मज्ञानेन तदज्ञान-बाधनद्वारा स्वस्वरूपाखण्ड-ब्रह्मणि साक्षात्कृते

ऽज्ञानतत्कार्य - सञ्चितकर्म - संशय - विपर्ययादीनामपि बाधितत्वा-दखिलबन्ध-रहितो ब्रह्मनिष्ठः ॥ २१७ ॥

217. எவன், தன்னுடைய ஸ்வரூபமான இரண்டற்ற மெய்ப்பொருளுணர்வினுல், அந்த மெய்ப்பொருளைப் பற்றிய அறியாமையை விலக்கி, அதை (மெய்ப்பொருளை) நேரனுபவமாகப் பெற்றிருக்கிருனே, எவன் ஸஞ்சிதம் என்று சொல்லப்படுகிற கடந்த காலத்து இருவினைகள், ஐயப்பாடுகள், பொய்யறிவுகள் முதலிய அறியாமை (அஞ்ஞானம்) யின் விளைவுகள் அழிந்துபோனதன் காரணமாக, எல்லாத்தளைகளிலிருந்தும் விடுபட்டு, பரம் பொருளிடத்தில் நிலைபெற்றிருக்கிருனே அவன் ஜீவன் முக்தன் என்று அழைக்கப்படுகிருன்.

" भिद्यते हृदयग्रन्थि-श्छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥"
इत्यादि श्रुतेः (मु. उप. २.२.८) ॥ २१८ ॥

218. "எது மேலும் கீழுமாக இருக்கிறதோ அதை உணரும்பொழுது, அவனுடைய இதய முடிச்சுக்களெல்லாம் துணிக்கப்படுகின்றன; அவனது எல்லா ஐயப்பாடுகளும் அகலுகின்றன; அவனுடைய கடந்த கால வினைகளெல்லாம் தீர்க்கப்படுகின்றன" என்று முண்டக உபநிடதம் (2. 2. 8.) கூறுகிறது.

अयं तु व्युत्थानसमये मांस-शोणित-मूत्र-पुरीषादि-भाजनेन शरीरेणान्ध्य-मान्द्यापटुत्वादि-भाजनेनेन्द्रिय-ग्रामेणाशनापिपासा-शोकमोहादि-भाजनेनान्तः करणेन च पूर्व-पूर्व-वासनया क्रियमाणानि कर्माणि भुज्यमानानि

ज्ञानाविरुद्धारब्ध-फलानि च पश्यन्नपि बाधितत्वात् परमार्थतो न पश्यति । यथेन्द्रजालमिति ज्ञानवांस्तदिन्द्र-जालं पश्यन्नपि परमार्थमिदमिति न पश्यति ॥ २१९ ॥

219. இந்த ஜீவன்முக்தன் ஸமாதியில் இல்லாத பொழுது, அவனுடைய மெய்யுணர்விற்கு முரணில்லாத வகையில் கடந்தகால வினைகளின் வாஸனையினுல் செய்யப்படும் காரியங்களைப் பார்த்துக்கொண்டிருக்கிருன். சதை, இரத்தம், கழிவுப்பொருள்கள் முதலியவற்ருேடு கூடின இந்த உடலினுலும், குருடு, தளர்ச்சி, ஆற்ருமை முதலியவற்ருேடு கூடிய புலன்களாலும், பசி, தாகம், துன்பம், மயக்கம் முதலியவற்ருேடு கூடின மனதாலும், பயன்களைக் கொடுக்கத் தொடங்கிவிட்ட (ப்ராரப்த) கர்மங்களின் நிகழ்ச்சியை அவன் பார்க்கிருன். அப்படிப் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதும் அவன் அவைகளை உண்மை என்று நினைத்துப் பார்ப்பதில்லை. காரணம், அவை (மெய்யுணர்விஞல்) பாதிக்கப்படுகின்றன (இல்லாதொழிகின்றன) என்பதே. மாய வித்தை நடக்கிறதென்று நன்ருக உணர்ந்து கொண்டிருக்கிற ஒருவன், அம்மாய வித்தையைப் பார்த்துக் கொண்டிருந்தபோதும் கூட, அதை உண்மை யென்று நம்பிவிடுவதில்லை. (அது போலவே இங்கும்).

“सचक्षु-रचक्षुरिव सकर्णोऽकर्ण इव.” इत्यादि-श्रुतेः ॥ २२० ॥

220. “கண்ணிருந்தும் கண்ணில்லாதவன்போல, காதிருந்தும் காதில்லாதவன்போல” என்பது போன்ற உபநிஷத் வாக்குகளும் இருக்கின்றன.

उक्तं च—

" सुषुप्तवज्जाग्रति यो न पश्यति
द्वयं च पश्यन्नपि चाद्वयत्वतः ।
तथा च कुर्वन्नपि निष्क्रियश्च यः
स आत्मविन्नान्य इतीह निश्चयः ॥" इति
(उपदेशसाहस्री ५) ॥ २२१ ॥

221. "எவன், தூக்கத்திலிருப்பதுபோலவே, விழித்திருக்கும்போதும் யாதொன்றையும் காணவில்லையோ ; இரண்டற்ற பரம்பொருளைப் பார்த்துக் கொண்டிருப்பதனாலே, பன்மையான பொருள்களைப் பார்த்தும் பார்க்கவில்லையோ ; எவன் காரியங்களைச் செய்துகொண்டிருக்கும்பொழுதும் செய்யாமலேயே இருக்கிறானோ அவனே ஆத்மாவைத் தெரிந்துகொண்டவன், மற்றவர்களல்ல என்பது இங்கு உறுதி" என்று உபதேச ஸாஹஸ்ரீயிலும் (5) சொல்லப்பட்டிருக்கிறது.

अस्य ज्ञानात्पूर्वं विद्यमानानामेवाहारविहारादीनामनुवृत्तिवच्छुभवासनानामेवानुवृत्ति-र्भवति शुभाशुभयोरौदासीन्यं वा ॥ २२२ ॥

222. இந்த ஜீவன்முக்தனிடத்தில், மெய்யுணர்வு பிறப்பதற்கு முன்பிருந்ததைப் போல, உண்பது, நடப்பது முதலியவை எப்படித் தொடர்ந்து நடைபெறுகின்றனவோ, அதைப்போன்று, நல்ல இச்சைகளே மிஞ்சுகின்றன. அல்லது, எல்லா நன்மைகளுக்கும், தீமைகளுக்கும் அவன் பராமுகமாய் இருந்து விடுகிறான்.

तदुक्तं—

" बुद्धाद्वैतसतत्त्वस्य यथेष्टाचरणं यदि ।
शुनां तत्त्वदृशां चैव को भेदोऽशुचिभक्षणे ॥" इति (नैष्कर्म्यसिद्धिः ४.६२)

" ब्रह्मवित्त्वं तथा मुक्त्वा स आत्मज्ञो न चेतरः " इति च (उपदेशसाहस्री ११५) ॥ २२३ ॥

223. " அத்வைத தத்துவத்தை உணர்ந்த ஒருவன் தன்னிச்சைப்படி நடப்பானுனல், கீழான ஆகாரத்தைச் சாப்பிடுவதில் தத்துவத்தை உணர்ந்தவனுக்கும் ஒரு நாய்க்கும் என்ன வேற்றுமை இருக்கமுடியும் ?" என்று நைஷ்கர்ம்ய - ஸித்தியில் (4. 62.) சொல்லப்பட்டிருக்கிறது.

" எவன் ' நான் பரம்பொருளை உணர்ந்துவிட்டேன் ' என்ற அகந்தையை விட்டுவிடுகின்ருனோ அவன்தான் பரம்பொருளை உணர்ந்தவன் ; மற்றவர்களல்ல" என்று உபதேச ஸாஹஸ்ரீயிலும் (115) கூறப்பட்டிருக்கிறது.

तदानी-ममानित्वादीनि ज्ञानसाधनान्यद्वेष्टृत्वादयः सद्गुणाश्चालङ्कारवदनुवर्तन्ते ॥ २२४ ॥

224. மெய்யுணர்வு தோன்றியபின், அடக்கம் முதலிய ஞான ஸாதனங்களும், அஹிம்ஸை முதலிய குணங்களும் ஜீவன்முக்தனுக்கு அணிகள் போலத் தொடர்ந்து இருக்கின்றன.

तदुक्तं—

"उत्पन्नात्मावबोधस्य ह्यद्वेष्टृत्वादयो गुणाः ।
अयत्नतो भवन्त्यस्य न तु साधनरूपिणः ॥ इति
—(नैष्कर्म्यसिद्धिः ४.६९) ॥ २२५ ॥

225. "அஹிம்ஸை முதலிய சிறப்புக்களெல்லாம் மெய்யுணர்ந்தவருக்கு இயற்கையாகவே முயற்சியின்றி அமைகின்றன. அவைகளைப் பயிற்சியின் மூலம் பெற வேண்டியதில்லை" என்று நைஷ்கர்ம்ய-ஸித்தி (4. 69.) யிலும் கூறப்பட்டிருக்கின்றது.

किं बहुनायं देहयात्रामात्रार्थ-मिच्छानिच्छा-परेच्छा-प्रापितानि सुखदुःखलक्षणान्यारब्धफलान्यनुभवन्नन्तः-करणाभासादीना-मवभासकः संस्तदवसाने प्रत्यगा-नन्द-परब्रह्मणि प्राणे लीने सत्यज्ञान-तत्कार्य-संस्का-राणामपि विनाशात् परम-कैवल्य-मानन्दैकरस-मखिल-भेद-प्रतिभासरहित-मखण्ड-ब्रह्मावतिष्ठते ॥ २२६ ॥

226. பல சொல்லி என்ன? ஜீவன்முக்தன் தன் மனத்தின் நிலைகளையும் பிரகாசிப்பித்துக்கொண்டு, பிராரப்த கர்மங்களின் பயனாக வந்ததும், தன்னிச்சையி னாலோ, பிறருடைய இச்சையினாலோ, அல்லது தன் னிச்சைக்கு எதிராகவோ உண்டானதுமான இன்ப துன்பங்களை, சரீரத்தின் யாத்திரைக்காக மட்டிலும் நுகர்ந்து கொண்டிருக்கிறான். முடிவில் (பிராரப்த கர்மங் களின் தீர்வுக்குப் பிறகு) அவனுடைய மூச்சு, தன் ஆத்மாவாகவே இருக்கின்ற பரம்பொருளிலே ஒடுங்கு கின்றபோது, அஞ்ஞானமும் அதன் விளைவுகளும்

எல்லாம் அழிந்துபடுகின்றன. அதன்பின், த்வைதத்தின் நிழல்கூட இல்லாததும், மேலானதும், அகண்டமானதும், தனித்து நிற்பதும், ஏகரஸமானதுமான பரம்பொருளாகவே அவன் நிற்கிருன்.

" न तस्य प्राणा उत्क्रामन्ति " (बृ.उप. ४.४.६.) " अत्रैव समवनीयन्ते " (बृ.उप.३.२.११) "विमुक्तश्च विमुच्यते " (कठ.उप.५.१.) इत्यादि श्रुतेः ॥ २२७ ॥

227. "அவனுடைய மூச்சுக் காற்றுக்கள் மேலே போவதில்லை" என்றும் (ப்ரு. உப. 4. 4. 6.), " இங்கேயே அடங்குகின்றன" என்றும் (ப்ரு. உப. 3. 2. 11), " விடுதலை அடைந்த பிறகு, விடுதலை அடைகிருன் " என்றும் சுருதிகள் (கட. உப. 5. 1) கூறுகின்றன.

**இங்ஙனம் ஸ்ரீஸதானந்த யோகீந்திரரால்**
**இயற்றப்பட்ட வேதாந்த ஸாரம்**
**முற்றிற்று**

**ஓம் தத் ஸத்.**

---

## அனுபந்தம்

### குறிப்புக்கள்

**50** (பக்கம் **19**). பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பு உருண்டையைப் போல:—நன்ருகக் காய்ந்து சூட்டினுல் பழுத்திருக்கிற இரும்பும் அதிலிருக்கும் நெருப்பும் ஒன்ருகவே அனுபவத்தில் பேசப்படுகின்றது. 'இரும்பு சுட்டு விட்டது' என்று சொல்கிருேம். 'இரும்பிலிருக்கும் நெருப்பு சுட்டு விட்டது' என்று சொல்வதில்லே. சுடுவது என்பது நெருப்பினுடைய குணம். இரும்பிற்கு அந்தக் குணம் கிடையாது. நெருப்பினுடைய குணத்தை இரும்பிற்கு ஏற்றி, இரண்டுக்கும் உள்ள வேற்றுமையை மறந்து ஒன்ருகப் பேசுகிருேம். 'இரும்பு என்ற சொல்லுக்கு இரும்பு என்ற உலோகத்துண்டுதான் நேரடியான அர்த்தமாகிறது; அதாவது, வாச்யார்த்தமாகிறது. 'இரும்பு சுடுகிறது' என்ற வாக்கியத்திலோ வெனில், 'இரும்பு' என்ற சொல் நெருப்பைக் குறிக்கிறது. இது லக்ஷ்யார்த்தம் எனப்படும். இதுபோலவே, 'தத்வமஸி' மஹாவாக்யத்திலும் 'தத்' என்பதன் நேர்ப்பொருள் மாயையோடு கூடிய ஈசுவரன்; 'த்வம்' என்பதன் நேர்ப்பொருள் அவித்யையோடு கூடிய ஜீவன். மாயை, அவித்யை இவற்ருேடு கூடிய ஈசுவரன், ஜீவன் இவர்களே இரும்பிற்கு ஒப்பிடலாம். இவர்களுடைய ஸ்வரூபமாக இருக்கிற, மாயையும் அவித்யையும் நீங்கின சுத்த சைதன்யமான பரப்ரஹ்மத்தை நெருப்பிற்கு ஒப்பிடலாம். மாயையினின்றும் அவித்யையினின்றும் பிரித்து அறியப்படாதபொழுது, 'தத்' என்பது ஈசுவரனேயும், 'த்வம்' என்பது ஜீவனேயும் குறிக்கின்றன. இவை அச்சொற்களின் வாச்யார்த்தங்கள். மாயை, அவித்யை இவற்றிலிருந்து பிரித்து அறியப்படும்

பொழுது 'தத்' என்பதும் 'த்வம்' என்பதும் உபாதி யில்லாத சுத்த சைதன்யத்தைக் குறிக்கின்றன. இது அச்சொற்களின் லக்ஷ்யார்த்தம் எனப்படுகிறது.

**101** (பக்கம் **33**). த்ரிவ்ருத்கரணம் :—' த்ரிவ்ருத் கரணம்' என்ருல் மூவ்வகைக் கலவை என்று பொருள் படும். சாந்தோக்ய உபநிஷத்திலே (VI, 3, 3) "இந்த மூன்றில் (மண், நீர், நெருப்பு) ஒவ்வொன்றையும் மூவகையாக்குவேன்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. (तासां त्रिवृतं त्रिवृतमेकैकं करवाणि) இங்கு பஞ்சபூதங் களில் வாயுவும் ஆகாயமும் விடப்பட்டன. பஞ்சீகரணம் என்ற ஐந்துவகைக் கலவையும் இந்த த்ரிவ்ருத் கரணம் என்ற முக்கலவையினுல் குறிக்கப்பட்டதாகவே வைத்துக்கொள்ளவேண்டும்.

**148** (பக்கம் **51**). அகண்டார்த்தம் :—'தத்வமஸி' என்ற மஹாவாக்கியம் அகண்ட அர்த்தத்தை உடையது. அகண்டம் என்ருல் பேதமில்லாத ஒரே வஸ்து என்று பொருள். ப்ரஹ்மம் அத்விதீயமான, அகண்டமான வஸ்து. இந்த அகண்ட ப்ரஹ்மத்தைப் பொருளாக உடையது தத்வமஸி மஹாவாக்கியம். 'தத்' 'த்வம்' என்ற இரண்டு சொற்களும் 'அஸி' என்ற சொல்லுடன் சேர்ந்து ஒரே பரம்பொருளைக் குறிக்கின்றன. பல சொற் களால் அமைந்துள்ள ஒரு வாக்கியம் ஒரே தனிப் பொருளைக் குறிக்கும்பொழுது அது அகண்ட அர்த் தத்தை உடையதாகின்றது. ஒவ்வொரு சொல்லிற்கும் அதற்கென்று அர்த்தம் உண்டு. ஒரு வாக்கியத்தி லுள்ள வெவ்வேறு சொற்கள் வெவ்வேறு அர்த்தங்களை உடையனவாக இருப்பதுதான் நாம் சாதாரணமாகக் காண்பது. இப்படிப்பட்ட சொற்களை ஒரு குறிப்பிட்ட ஸம்பந்தத்தில் அமைப்பதுதான் வாக்கியம் எனப்படுகின் றது. இப்படி அமைக்கும் முறை இரண்டு வகைப்படும்.

(1) உதாரணமாக, 'தடியினுல் மாட்டைக் கொண்டு வா.' (दण्डेन गां आनय) என்னும் வாக்கியத்தில் தடி, மாடு, கொணர்தல் என்ற வெவ்வேறு அர்த்தங்கள் உடைய சொற்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. 'தடி யினுல்' என்று மூன்ரும் வேற்றுமை உருபோடும் (த்ரு தீயா விபக்தி), 'மாட்டை' என்று இரண்டாம் வேற் றுமை உருபோடும் (த்விதீயா விபக்தி) சொற்கள் பிரயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன. செயப்படுபொரு ளாகிற மாடு வேறு, கருவியாகிற தடி வேறு, கொணர்வ தாகிற காரியமும் வேறு. இப்படி வெவ்வேருன அர்த்தங் களைக் குறிக்கும் சொற்களால் அமைந்த வாக்கியம் பேத ஸம்ஸர்க்கம் உடையது.

(2) 'நீலநெய்தல்' (नीलमुत्पलम्) என்னும் சொற் ஞெடரில், வார்த்தைகள் இரண்டாக இருந்தாலும், தனித் தனியே பார்க்கும்பொழுது அர்த்தங்களும் வெவ்வேருக இருந்தாலும், சொற்ஞெடரை மொத்தமாக எடுத்துக் கொண்டால், அது 'நீலநெய்தல்' என்ற ஒரே பொரு ளைக் குறிப்பதைப் பார்க்கிருேம். நெய்தலிலிருந்து அதன் நீல நிறத்தைப் பிரிக்க முடியாது. அதற்கேற்ப இவ்வாக்கியத்திலும் 'நீலம்' என்ற சொல்லும், 'உத் பலம்' (நெய்தல்) என்ற சொல்லும் ஒரே வேற்றுமை உருபோடு (ஸமான விபக்தி) பிரயோகிக்கப்படுகின்றன. நீலம் என்ற சொல்லிற்கும் உத்பலம் என்ற சொல்லிற் கும் ஸாமாஞதிகரண்யம் இருக்கிறது என்று இங்கே சொல்லுகிருேம். இப்படிப்பட்ட வாக்கியம் அபேத ஸம் ஸர்க்கம் உடையது என்று கூறுவார்கள். அதாவது, வேருன சொற்களால் ஆனதாக இருந்தாலும் அபேத மான அர்த்தத்தை உடையது.

'தத்வமஸி' மஹாவாக்கியம் இந்த இரண்டாவது வகை வாக்கியங்களைச் சேர்ந்தது. எனினும் 'இது நீல

நெய்தல்' என்பதைப் போலல்ல. 'நீலநெய்தல்' என்ற தொடரில், நீலம் என்பது குணமாகவும், நெய்தல் என்பது குணியாகவும் இருக்கின்றன. ஆகவே அவற்றிற்கிடையேவிசேஷண-விசேஷ்ய-பாவம் இருக்கிறது. தத்-த்வம்-அஸி என்பதிலோ, 'தத்' என்பதால் குறிக்கப்படும் ஈசுவரனும் 'த்வம்' என்பதால் குறிக்கப்படும் ஜீவனும் ஒருவருக்கொருவர் விசேஷண-விசேஷ்ய-பாவம் உடையவர்களல்ல. ஜீவன் ஈசுவரனுடைய விசேஷணம் அல்லது குணம் அல்ல. ஈசுவரன், ஜீவன் இருவருமே ஸ்வரூபத்தில் சுத்த சைதன்யமாகவே இருக்கின்றனர். ஆகவே 'தத்' என்பதும் 'த்வம்' என்பதும் ஒரே சைதன்யத்தை லக்ஷணையினுல் குறிக்கின்றன. இது தான் அகண்டார்த்தம் எனப்படுவது.

---

# திரு அருள் மொழி

*

தேவார திருவாசக திவ்வியப் பிரபந்தங்களினின்றும் பொறுக்கி எடுக்கப்பட்ட 500 பாக்கள் பொழிப்புரையோடும் விளக்கக் குறிப்புகளோடும் வெளியிடப்பட்டுள்ளன. பக்தி ஸாரம் எனும் பகுதி இப்பாடல்கட்கு முன்னும், சிவ விஷ்ணு ஸஹஸ்ர நாமங்கள் பிரபந்தங்களினின்றும் தொகுக்கப்பட்டு அகவல் வடிவாக அமைந்துள்ள பகுதி பின்னிலும் உள்ளன. இந் நூல் பலராலும் போற்றப்பட்டுள்ளது.

*

பக்கம் 621

ஐந்தாம் பதிப்பு — விலை ரூ. 3—50

---

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: சென்னை-4

புதிய மூன்றும் பதிப்பு !

# சந்தியா வந்தனம்

(நாகரத்திலும், தமிழிலும்)

★

பொழிப்புரையுடனும், ஸமிதாதானத்தோடு
கூடிய விரிவான அனுபந்தத்தோடும்
இந்நூல் தயாரிக்கப்பட்டுள்ளது.

★

**பக்கம் 116**

சாதா ரூ. **1-00** காலிகோ ரூ. **1-50**

---


ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-4

## நூல்கள் நாகரத்திலும் தமிழிலும்

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| ஸ்ரீமத் பகவத்கீதை விரிவுரையுடன் | ... | 3 | 50 |
| ,, ,, தமிழில் பாராயணப் பதிப்பு | ... | 1 | 25 |
| ,, ,, மூலம் மட்டும் | ... | 0 | 60 |
| உபநிஷத்ஸாரம் ஈச, கேன, கட. உரையுடன் | ... | 1 | 75 |
| ,, ப்ரச்ன, முண்டக, மாண்டுக்ய ,, | ... | 1 | 75 |
| ,, சாந்தோக்யம், ப்ருஹதாரண்யகம் பிரம்ம ஸூத்ரச் சுருக்கத்துடன் | ... | 3 | 00 |
| தைத்திரீயோபநிஷத்து உரையுடன் | ... | 1 | 00 |
| தைத்திரீய மந்த்ரகோசம் — சீக்ஷாவல்லீ, ப்ருகுவல்லீ, ஆனந்தவல்லீ, நாராயண வல்லீ, ருத்ரம், சமகம், ஸூக்தங்கள். மூலம் நாகர லிபியில் ஸ்வரத்துடன் | ... | 1 | 00 |
| தைத்திரீய மந்த்ரகோசம்—தமிழில் மூலம் ஸ்வரத்துடன் | ... | 1 | 50 |
| லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் | ... | 2 | 00 |
| ,, ஸ்தோத்ரம் பாராயணத்திற்குரியது | ... | 1 | 00 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதீ பாஷ்யம் | ... | 1 | 50 |
| ,, ஸ்தோத்ரம் பாராயணத்திற்குரியது | ... | 0 | 50 |
| தேவீ மாகாத்மியம் உரையுடன் | ... | 3 | 00 |
| விஷ்ணு ஸஹஸ்ரநாமம் ,, | ... | 2 | 75 |
| ஸ்ரீருத்ரம் ,, | ... | 2 | 00 |
| புருஷ ஸூக்தம் ,, | ... | 1 | 00 |
| ஸந்த்யாவந்தனம் ,, | ... | 1 | 00 |
| உபநயனம் ,, | ... | 1 | 00 |
| ஸௌந்தர்யலஹரீ பாஷ்யம் | ... | 2 | 50 |
| ,, மூலம் | ... | 0 | 37 |

ஸ்ரீ. ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை-4



VEDANTASARA ... Re. 1-25. Calico Rs. 2-00